# சுன்னத் வல் ஜமாஅத்தினரின் அடிப்படைக் கொள்கை

அரபுமூலம்

அஷ்ஷைய்ஹ் முஹம்மத் இப்னு ஸாலிஹ் அல் உஸைமீன்

The Cooperative Office For Call & Guidance to Communities at Naseem Area
Riyadh - Al-Manar Area - Front of O.P.D. of Al-Yamamah Hospital
Tel. 2328226 - 2350194 - Fax : 2301465
P.O. Box 51584 Riyadh 11553



TAMIL

43

# சுன்னத் வல் ஜமாஅத்தினரின்

# அடிப்படைக் கொள்கை

*அரபுமூலம்*
அஷ்ஷெய்ஹ் முஹம்மத் இப்னு ஸாலிஹ் அல் உஸைமீன்

*தமிழ்மூலம்*
முஹம்மத் ஷரீப் முஹம்மத் ரஷீத்
இஸ்லாமிய அலுவல்கள் அமைச்சு
றியாத் சவுதி அரேபியா



# முன்னுரை :

சர்வ புகழும் ஒரே இறைவனான அல்லாஹ்வுக்கே! இறுதி நபியான முஹம்மது ﷺ அவர்கள் மீதும், அவரது குடும்பத்தார் மீதும், அவர்களது தோழர்கள் மீதும், சாந்தியும், சமாதானமும் உண்டாவதாக.

கண்ணியமிக்கப் பேரறிஞரும், சகோதரருமான அஷ்ஷெய்க், முஹம்மத் இப்னு ஸாலிஹ் அல்-உஸைமீன் அவர்கள் எழுதிய சுருக்கமானதும், பெறுமதி மிக்கதுமான கொள்கை சம்மந்தப்பட்ட இச்சிறிய நூலை கேட்டறிந்தேன். அல்லாஹ்வை ஏகத்துவப் படுத்துதல், இன்னும் அல்லாஹ்வின் பெயர்கள், பண்புகள் பற்றிய விடயம், மேலும், மலக்குமார்கள், வேதநூல்கள், தூதர்கள், மறுமை மற்றும் கத்ர் எனும் இறைவிதியின் நன்மை தீமை ஆகியவற்றைக் கொண்டு விசுவாசிப்பது பற்றிய விடயங்களில் சுன்னத் வல் ஜமாஅத்தினரது கொள்கையை, பரந்த கண்ணோட்டத்தில் விவரிப்பதை அறிந்தேன். மேலும், அவர்கள் அதனை ஒன்று திரட்டுவதில் மிகவும் திறம்படச் செய்துள்ளார். அவ்வாறே மேற் சொன்ன ஈமானின் அம்சங்களை விசுவாசம் கொள்வது சம்பந்தமாக எந்த ஒரு முஸ்லிமுக்கும், கற்கும் மாணவருக்கும் தேவையான எல்லா விடயங்களையும் அவர்கள் அதில் கூறியுள்ளார்கள். மேலும், ஏனைய, அகீதா நூல்களில் காண முடியாத, அகீதாவுடன் நெருங்கிய தொடர்புள்ள பல பிரயோஜனமான விடயங்களையும் அவர் மேலதிகமாக இணைத்துக்குக் கூறியுள்ளார்கள்

எனவே, அவர்களுக்கு அல்லாஹ் நற்கூலி பகர்வானாக, மேலும் அவர்களின் கல்வியை விருத்தி செய்து, அவர்களுக்கு மென்மேலும் நேர்வழி காட்டுவானாக. மேலும், அவர்களின் இந்நூல் மூலமும், அவர்களது ஏனைய நூற்கள் மூலமும் பலனளிப்பானாக. மேலும், எம்மையும், அவர்களையும், நேர்வழி பெற்றவர்களாகவும், விழிப்புடன் அல்லாஹ்வின் பக்கம் அழைக்கின்றவர்களாகவும் ஆக்கிவைப்பானாகவும், நிச்சயமாக அல்லாஹ் (யாவற்றையும்) கேட்கின்றவனாகவும் மிகவும் (படைப்பினங்களிடையே) சமீபமான வனாகவும் இருக்கின்றான்.

மேற்சொன்னவற்றை மொழிந்தவர் அல்லாஹ்விடம் தேவையுடைய-வரான அப்துல் அஸீஸ் பின் அப்துல்லாஹ் பின் பாஸ் அவர்-களாவார். அவர்களை அல்லாஹ் மன்னித்தருள்வானாக, மேலும் எங்கள் நபிகள் முஹம்மத் (ﷺ) அவர்கள் மீதும், அவர்களின் தோழர்கள், குடும்பத்தார்கள் மீதும், அல்லாஹ் அருளும், கருணையும் புரிவானாக.

தலைவர்,
ஆராய்ச்சி அழைப்பு,
மார்க்கத்தீர்ப்பு வழிகாட்டல் துறை இலாகா.

**குறிப்பு**

இப்புத்தகத்தில் பிழைகள் அல்லது சந்தேகங்கள், மற்றும் விளக்கங்கள் தேவைப்படின் கீழ் காணும் விலாசத்துடன் தொடர்பு கொள்ளவும்.

'Thwheed Mosque'
Ulahituwela
Malwana
Sri Lanka

20 Rabul-Ahir 1417H



அளவற்ற அருளாளனும், நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால் (ஆரம்பிக்கிறேன்)

சர்வ புகழும், உலகத்தாரின் இரட்சகனான அல்லாஹ்வுக்கே. மேலும் (அவனைப்) பயந்து கொண்டவர்களுக்கு (நல்ல) முடிவு உண்டு. மேலும் அநியாயக்காரர்களுக்கே தவிர (அல்லாஹ்வின்) பகைமை (வேறுயாருக்கும்) இல்லை. அல்லாஹ்வைத் தவிர வேறு நாயன் இல்லை, அவன் தனித்தவன் அவனுக்கு ஈடு கிடையாது. அவன் உண்மையான, தெளிவான ஆட்சியாளன் என்று நான் சாட்சி கூறுகிறேன். மேலும், முஹம்மத் நபி ﷺ அவர்கள் அல்லாஹ்வின் அடியாரும், அவனின் திருத்தூதரும், நபிமார்களுள் இறுதியானவரும், பயபக்திவான்களின் தலைவருமாவார்கள், என்றும் சாட்சி கூறுகின்றேன். அல்லாஹ் தஆலா நபி அவர்கள் மீதும் அவர்களின் தோழர்கள், குடும்பத்தினர்கள் மீதும், அவர்களை மறுமை நாள்வரை நல்லமுறையில் பின்பற்றியவர்கள் மீதும் அல்லாஹ் அருளும், கருணையும் புரிவானாக.

மேலும் அல்லாஹ் தஆலா தன் தூதர் முஹம்மத் ﷺ அவர்களை நேர்வழியைக் கொண்டும், உலகத்தாரின் அருட் கொடையான சத்திய மார்க்கத்தைக் கொண்டும், நல்லமல்கள் புரிகின்றவர்களுக்கு, முன்மாதிரியானவர்களாகவும், எல்லா அடியார்களுக்கும் எடுத்துக் காட்டாகவும் அனுப்பிவைத்தான்.

எனவே, ரசூல் ﷺ அவர்கள் தனக்கு இறக்கி வைக்கப்பட்ட அல் குர்ஆன் மூலமாகவும் ஞான அருள் மூலமாகவும், அடியார்களின் நலன்களையும், அவர்களின் உலக, மறுமை நிலைமைகள் சீராவதற்குரிய அடிப்படை அம்சங்களான சரியான அகீதா கொள்கை, நேர்மையான அமல்கள்,

செயல்கள், உயரிய குணங்கள், நலலொழுக்கங்கள் ஆகியவற்றை விளக்கினார்கள். இதனால், அவர்கள் தன் சமுதாயத்தை வெண்ணிறமான (தெட்டத் தெளிவான) பாதையில் விட்டுச் சென்றார்கள். அதன் இரவும் பகல் போன்றது. அழிந்து போகின்றவனைத் தவிர (யாருமே) அதனை விட்டும் தவறி விடமாட்டார்.

(அவர்கள்) காட்டிய அந்தப் பாதையில் அல்லாஹ்வுக்கும், அவனது தூதருக்கும் செவிமடுத்த சமுதாயத்தினர் வழிநடந்தார்கள். அவர்கள் தான், ஸஹாபாக்கள், தாபீஈன்கள் (ஸஹாபாக்களுக்கு அடுத்து வந்து பின்பற்றியவர்கள்) அவர்களை நல்ல முறையில் பின்பற்றியவர்கள் ஆகியோர்களுள் நல்ல படைப்பினர்களாக உள்ளனர். எனவே, அவர்கள் அல்லாஹ்வின் மார்க்கத்தை ஏற்று, அவனின் (தூதர் மூலமாக அருளிய) சுன்னத்தைக் கடைபிடித்து, கொள்கை, குணம், ஒழுக்கம் ஆகிய அம்சங்களில், மார்க்கத்தை மிகவும் கண்டிப்பாகப் பாதுகாத்துக் கொண்டார்கள். எனவே, அவர்கள் தான் உண்மையில் என்றென்றும் நிலைப்பாடு கொண்ட கூட்டத்தினராக திகழ்ந்தார்கள். அவர்களை யார் தாழ்த்திய போதிலும், அல்லது அவர்களுக்கு யார் தான் மாறு செய்த போதிலும், அல்லாஹ்வின் கட்டளை வரும் வரை அவர்கள் அதிலேயே நிலைத்திருந்தார்கள்.

அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும், நாமும் அவர்களின் அடிச்சுவடுகளில் சென்று கொண்டிருக்கின்றோம். குர்ஆன், சுன்னாவைப் பற்றிப் பிடித்த அவர்களின் வாழ்க்கையைப் பின் தொடர்கின்றோம். அல்லாஹ்வின் அருளை நினைவு கூறும் வண்ணமும், ஒவ்வொரு முஃமினும் இருக்கவேண்டிய கட்டாய நிலைமையை விவரித்துக் கூறுவதற்காகவுமே நாங்கள் இதனைக் கூறுகின்றோம்.

எங்களையும், எங்களைச் சார்ந்த முஸ்லிம் சகோதரர்களையும், இம்மையிலும், மறுமையிலும் அல்லாஹ் நிலையான சொல்லால் நிலைத்து விடும் படி அவனை வேண்டிக் கொள்வோமாக. மேலும் அல்லாஹ் தன்னிடமிருந்து நமக்கு அருள்பாலிப்பானாக. நிச்சயமாக அவன் அருளாளனாக உள்ளான்.

இந்த விடயம் அதி முக்கியம் வாய்ந்தது என்பதனாலும், இவ்விடயத்தில் அநேக படைப்பினர்கள் இஷ்டப்படி பிளவுற்றிருப்பதாலும், எமது கொள்கையான - சுன்னத் வல் ஜமாஅத்தினருடைய அகீதாவை சுருக்கமான வடிவில் எழுத விரும்புகிறேன். அந்தக் கொள்கைதான் அல்லாஹ்வைக் கொண்டும், அவனின் மலக்குமார்கள், அவனது வேதங்கள், அவனது

தூதர்கள், மறுமை நாள், இறைவிதி, அதன் நன்மை, தீமை ஆகியவற்றைக் கொண்டும் விசுவாசங் கொள்வதாகும்.

இதனை (இப்புத்தகத்தை) தூய மனதுடன் செய்யப்பட்டதாக ஆக்கி, அல்லாஹ்வின் திருப்பொருத்தத்தைத் தருவிக்கக் கூடியதாகவும், அது மேலும் அல்லாஹ்வின் அடியார்களுக்கு பலன் அளிக்கக் கூடியதாகவும் ஆக்கியருளுமாறு அவனையே கேட்கிறேன்.

## எமது (அகீதா) அடிப்படைக் கொள்கை

எமது கொள்கை:-

அல்லாஹ்வைக் கொண்டும், அவனுடைய மலக்குகள், அவனுடைய வேதங்கள், அவனுடைய தூதர்கள், மறுமை நாள், இறைவிதியில் உள்ள நன்மை தீமை ஆகியவற்றைக் கொண்டும் விசுவாசங் கொள்வதாகும்.

எனவே, நாம் அல்லாஹ்வின் பராமரிப்புத் தன்மையைக் கொண்டு ஈமான் கொள்ள வேண்டும். அவ்வாறு ஈமான் கொள்வது எப்படியெனில், அல்லாஹ் தான் இறைவன், படைப்பாளன், ஆட்சியாளன், எல்லாப் படைப்பினங்களையும் அவதானித்துக் கொண்டிருப்பவன் என்று விசுவாசிப்பதாகும்.

மேலும், நாம் அல்லாஹ்வின் தெய்வீகத் தன்மையைக் கொண்டும் விசுவாசிப்பது அவசியம். அது எவ்வாறென்றால் அவனே உண்மையான இறைவன் அவனன்றி வணங்கப்படக் கூடிய அனைத்தும் பொய்யானவை யென்று விசுவாசிப்பதாகும்.

அவ்வாறே நாம் அல்லாஹ்வின் திருப்பெயர்கள் கொண்டும், அவனின் பண்புகளைக் கொண்டும் விசுவாசங் கொள்ளவும் கடமைப் பட்டுள்ளோம். அதாவது, அல்லாஹ்வுக்கு அழகிய திருநாமங்களும், மேலான பூரணமான பண்புகளும் இருக்கின்றன என்றும் விசுவாசிக்க வேண்டும்.

அல்லாஹ்வின் தனித்துவத்தைப் பற்றிய விசுவாசம்:

மேலும் அவன் மேற்சொன்னவற்றில் தனித்தவன் என்று விசுவாசிப்பதும் அவசியம். அதாவது, அவனுடைய பராமரிப்புத் திறன், தெய்வீகம், அவனது பெயர்கள், குணங்கள் ஆகியவற்றில் அவனுக்கு ஈடு இணை கிடையாது என்று விசுவாசிப்போமாக. அல்லாஹ் இது பற்றி பின்வருமாறு கூறுகின்றான்.

*(அவனே) வானங்களுக்கும், பூமிக்கும் அவை இரண்டுக்குமிடையே உள்ளவற்றிற்கும் இறைவனாக இருக்கின்றான். ஆகையினால் அவன் (ஒருவ)னையே வணங்குவீராக மேலும், அவனை வணங்குவதில் (கஷ்டங்களையேற்றுப்) பொறுமையுடன் இருப்பீராக (பெயரில், வல்லமையில், மற்றும் தன்மைகளில் அல்லாஹ்வுக்கு) நிகரானவனை நீர் அறிவீரா?*

**(மர்யம்) 19 : 65**

*அல்லாஹ் (எத்தகையவனென்றால்) அவனைத் தவிர (வணக்கத்துக்குரிய வேறு) நாயன் இல்லை; (அவன்) ஜீவனுள்ளவன்; (என்றென்றும்) நிலைத்திருப்பவன். அவனை சிறு துயிலும், உறக்கமும் பீடிக்காது. வானங்களிலுள்ளவையும், பூமியிலுள்ளவையும் அவனுக்கே உரியன; அவனுடைய அனுமதியின்றி அவனிடத்தில் பரிந்து பேசுபவர் யார்? அவர்களுக்கு முன்னால் இருப்பவற்றையும், பின்னால் இருப்பவற்றையும் அவன் நன்கறிவான்; அவனுடைய நாட்டமின்றி அவனுக்கு தெரிந்தவற்றிலிருந்து யாதொன்றையும் (மற்றெவரும்) அறிந்து கொள்ளமாட்டார்கள். அவனுடைய "குர்ஸிய்யு" (அவனுடைய அரசாட்சி) வானங்களிலும், பூமியிலும் விசாலமாக (பரவி) இருக்கின்றது. அவ்விரண்டையும் காப்பது அவனுக்கு சிரமத்தை உண்டாக்காது. மேலும் அவன், மிக்க உயர்ந்தவன்.*

**(அல்பகரா) 2 : 255**

*அவன் (தான்) அல்லாஹ்; அவன் எத்தகையவனென்றால் அவனைத் தவிர (வணக்கத்துக்குரிய வேறு) நாயன் இல்லை; (அவன்) மறைவானதையும், வெளிப்படையானதையும் நன்கறிகிறவன்; அவனே அளவற்ற அருளாளன்; மிகக் கிருபையுடையவன்.*

*அவன் (தான்) அல்லாஹ்; அவன் எத்தகையவனென்றால் அவனைத்தவிர (வணக்கத்திற்குரிய) வேறு நாயன் இல்லை; (அவன்தான் உண்மையான) பேரரசன்; பரிசுத்தமானவன்; சாந்தி அளிப்பவன்; அபயமளிப்பவன்; கண்காணிப்பவன்; (யாவரையும்) மிகைத்தவன்; அடக்கி ஆளுபவன்;*

*பெருமைக்குரியவன்; அவர்கள் இணைவைப்பவற்றை விட்டும் அல்லாஹ் மிகப் பரிசுத்தமானவன்.*

*அவன் (தான்) அல்லாஹ்; படைப்பவன்; (அவனே படைப்புகளை ஒழுங்கு படுத்தி) உண்டாக்குபவன்; (அவனே படைப்பினங்களின்) உருவத்தை அமைப்பவன்; அவனுக்கு அழகான பெயர்களிருக்கின்றன; வானங்களிலும், பூமியிலும் உள்ளவை (அனைத்தும்) அவனையே துதிசெய்கின்றன; அவனே (யாவரையும்) மிகைத்தோன்; தீர்க்கமான அறிவுடையோன்.*

**(அல்ஹஷ்ரு) 59 : 22,24**

அவனுக்கே வானங்கள், பூமியினது ஆட்சியுரியது என்றும் விசுவாசிப்போமாக.

*வானங்கள் மற்றும் பூமியின் ஆட்சி அல்லாஹ்வுக்கே உரியதாகும்; அவன் நாடியவற்றை அவன் படைக்கிறவன்; (ஆகவே) அவன் நாடியவர்களுக்குப் பெண் மக்களை மட்டும் கொடுக்கின்றான்; அவன் நாடியவர்களுக்கு ஆண் மக்களை மட்டும் கொடுக்கின்றான்.*

*அல்லது, ஆண் மக்களையும், பெண் மக்களையும் கலந்தே கொடுக்கின்றான்; அன்றியும், அவன் நாடியவர்களை மலடாகவும் ஆக்கி விடுகின்றான்; நிச்சயமாக அவன் (யாவற்றையும்) நன்கறிந்தவன்; (தான் விரும்பியதைச் செய்ய) மிக்க ஆற்றலுடையவன்.*

**(அஷ்ஷூரா) 42 : 49,50**

மேலும் அவனைப் போல எதுவும் ஒப்பானது இல்லையென விசுவாசிப்போம்.

*அவனைப் போன்று எப்பொருளும் இல்லை; அவனே (யாவற்றையும்) செவியேற்கிறவன்; பார்க்கிறவன்.*

*வானங்கள் மற்றும் பூமியின் (களஞ்சியங்களின்) சாவிகள் அவனுக்கே உரியதாகும். அவன் நாடியவர்களுக்கு உணவை விரிவாக்குகின்றான்; (அவன் விரும்பியவர்களுக்கு சுருக்கி) அளவோடு கொடுக்கிறான்; நிச்சயமாக அவன், ஒவ்வொரு பொருளைப் பற்றியும் நன்கறிகின்றவன்.*

**(அஷ்ஷூரா) 42 : 11,12**

மேலும் நாம் விசுவாசிக்க வேண்டிய விடயங்களில் பலதை அல்குர்ஆன் பின்வருமாறு விபரிக்கிறது.

*பூமியிலுள்ள எந்த ஊர்வனவும் அவற்றின் உணவு அல்லாஹ்வின் மீது (பொறுப்பாக) இருந்தே தவிர இல்லை; அவை தங்குமிடத்தையும், அவை ஒப்படைக்கப் படு(ம்)(சேரு)மிடத்தையும் அவன் (நன்கு) அறிகிறவன்; (இவை) யாவும் (லவ்ஹுல் மஹ்ஃபூல் எனும்) தெளிவான புத்தகத்தில் (பதிவு செய்யப் பட்டு) இருக்கின்றன.*

**(ஹூத்) 11 : 6**

*இன்னும், அவனிடமே மறைவானவற்றின் சாவிகள் இருக்கின்றன; அவற்(றிலுள்ளவற்)றை அவனையன்றி வேறெவரும் அறியார்; மேலும், கரையிலும், கடலிலும் உள்ளவைகளையும் அவன் நன்கறிவான்; அவன் அறியாமல் யாதோர் இலையும் உதிர்வதில்லை; பூமியின் (ஆழத்தில்) அடர்ந்த இருள்களில் (புதைந்து) கிடக்கும் வித்தும், பசுமையானதும், உலர்ந்ததும் (அவனுடைய) தெளிவான (பதிவுப்) புத்தகத்தில் இல்லாமலில்லை.*

**(அல் அன்ஆம்) 6 : 59**

*நிச்சயமாக அல்லாஹ் அவனிடம்தான் மறுமை நாள் பற்றிய அறிவு இருக்கிறது; அவனே மழையையும் இறக்கி வைக்கிறான்; அவனே கர்ப்பங்களில் உள்ளவைகளையும் அறிகிறான்.; எந்த ஆத்மாவும், நாளை அது எதைச் சம்பாதிக்கும் என அறியாது; மேலும், எந்த ஆத்மாவும் எந்த பூமியில் தனக்கு மரணம் சம்பவிக்கும் என்பதையும் அறியாது; நிச்சயமாக அல்லாஹ் (அவனே) நன்கறிகிறவன்; (செய்திகளை) நன்குணர்பவன்.*

**(லுக்மான்) 31 : 34**

மேலும் அல்லாஹ் தஆலா தான் நாடியதை, நாடிய போது நாடியவாறு கதைப்பான் என்றும், விசுவாசிக்க வேண்டும்.

*இன்னும், அல்லாஹ் மூஸாவுடன் உறுதியாக பேசியுமிருக்கிறான்.*

**(அன்னிஸா) 4 : 164**

*இன்னும் தூர்(ஸினாய்) மலையின் வலப்பக்கத்திலிருந்து அவரை நாம் அழைத்தோம்; இரகசியம் பேசுகிறவராக அவரை நாம் (நமக்கு) நெருக்கமாக்கியும் வைத்தோம்.*

**(மர்யம்) 19 : 52**

*என் இறைவனின் வாக்கியங்களுக்கு (அதை எழுதுவதற்கு) கடல் (நீர்) யாவும் மையாக இருந்தாலும் என் இறைவனின் வாக்கியங்கள் (எழுதி) முடிவதற்கு முன்னதாகவே, கடல் (நீர்) முடிந்து செலவாகி விடும்.*

**(அல் கஹ்ஃப்) 18:109**

*மேலும் நிச்சயமாக பூமியிலுள்ள மரங்கள் (யாவும்) எழுது கோல்களாகவும், கடல் (நீர் யாவும் மையாக இருந்து) அ(து தீர்ந்)தற்கு பின்னர் ஏழு கடல்கள் அதனுடன் (மையாக) சேர்ந்து (கொள்ள அவற்றால் எழுதிக்) கொண்டிருந்தாலும் அல்லாஹ்வின் வாக்குகள் (எழுதித்) தீராது; நிச்சயமாக அல்லாஹ் (யாவையும்) மிகைத்தவன்; தீர்க்கமான அறிவுடையவன்.*

**(லுக்மான்) 31:27**

மேலும் அல்லாஹ்வின் பேச்சுக்கள் யாவும் பரிபூரணமாக நிகழ்ச்சிகளை உண்மையாக எடுத்துரைப்பனவாகவும், சட்டங்களில் நேர்மையானவை என்றும், அழகான வாக்கியத்திறன் உடையன என்றும் விசுவாசிப்பதும் எமது கடமையே.

அல்குர்ஆனில் அல்லாஹ் பின்வருமாறு கூறியுள்ளான்.

*மேலும், (நபியே) உமதிறைவனின் வார்த்தைகள் (அவன் கூற்றுக்களில்) உண்மையாலும் (அவன் செயல்களில்) நீதத்தாலும் பூர்த்தியாகிவிட்டன.*

**(அல்அன்ஆம்) 6 : 115**

*இன்னும், வார்த்தையால் (அதை அறிவிப்பதில்) அல்லாஹ்வைவிட மிக உண்மையாளன் யார்?*

**(அந்நிஸா) 4 : 87**

மேலும் அல்குர்ஆன் அல்லாஹ்வின் பேச்சு, உண்மையாகவே அல்லாஹ் குர்ஆனைக் கொண்டு பேசினான். மேலும் அதனை அவன் ஜிப்ரீலுக்குக்

கொடுத்தான். ஜிப்ரீல் (அலை) அவர்களோ அந்தக் குர்ஆனை முஹம்மத் ﷺ அவர்களின் இதயத்தில் இறக்கி வைத்தார்கள் என்பது பற்றியும் நாம் விசுவாசிக்க வேண்டும்.

*உண்மையைக் கொண்டு இதனை உமதிரட்சகனிடமிருந்து 'ரூஹுல் குத்ஸ்' (எனும் ஜிப்ரீல்) இறக்கி வைத்தார் என்று (நபியே) நீர் கூறுவீராக !*

(அன்னஹ்ல்) 16 : 102

*மேலும் (நபியே!) நிச்சயமாக (குர்ஆனாகிய) இது அகிலத்தாரின் இரட்சகனால் இறக்கிவைக்கப்பட்டதாகும்.*

*(அல்லாஹ்வின் கட்டளைப்படி) ரூஹுல் அமீன் (எனும் ஜிப்ரீல்) இதனைக் கொண்டு இறங்கினார்.*

*அச்சமூட்டி எச்சரிக்கை செய்பவர்களில் (ஒருவராக) நீர் ஆவதற்காக உமது இதயத்தின் மீது தெளிவான அரபி மொழியில் (கூடுதல் குறைவின்றி இதை இறக்கினான்)*

(அஷ்ஷுஅரா) 26 : 192-195

மேலும் அல்லாஹுதஆலா தன் பண்புகளிலும், தனித் தன்மையாலும் அவனின் படைப்புக்களை விட மேலானவனாக உள்ளான், என்றும் நாம் விசுவாசிக்க வேண்டும்.

*மேலும் அவன் மிக்க உயர்ந்தவன், மகத்துவமிக்கவன்.*

(அல்பகரா) 2 : 255

மேலும் அல்லாஹ் கூறுகின்றான்.

*மேலும், அவனே தன் அடியார்களை மேலிருந்து (அவர்களை) அடக்கி ஆள்பவன்; அன்றியும் தீர்க்கமான அறிவுடையவன்; (யாவையும்) நன்கு உணர்பவன்.*

(அல்அன்ஆம்) 6 : 18

மேலும் அவனே அனைத்தையும் படைத்தான் என்றும் விசுவாசிக்க வேண்டும்.

*அவன் எத்தகையவனென்றால், வானங்களை மற்றும், பூமியை ஆறு நாட்களில் படைத்தான்; பின்னர் (தன் கண்ணியத்திற்குத் தக்கவாறும், மகத்துவத்திற் குரியவாறும் அர்ஷின் மீதிருப்பது அவனுக்கு எவ்வாறு தகுமோ அவ்வாறே) அவன் அர்ஷின் மீது உயர்ந்து (நிலை பெற்று) விட்டான். (இவைகளைப் பற்றிய) சகல காரியங்களையும் அவனே (திட்டமிட்டு) நிர்வகிக்கின்றான்;*

(யூனுஸ்) 10 : 3

அர்ஷில் அவன் அமைந்து விட்டான் என்பது, அதில் அவன் உயர்ந்து விட்டான். அவனது கண்ணியத்துக்கும், மகத்துவத்துக்கும் பொருத்தமான முறையிலும் அவன் அர்ஷில் விசேஷமான ஒரு முறையிலும் அமர்ந்துள்ளான். அது எவ்வாறு என்பதை அவனைத் தவிர யாரும் அறிய மாட்டார்.

மேலும் அல்லாஹ் தஆலா அர்ஷில் இருந்தவாறே தன் படைப்புக் களுடன் அண்மித்தும் இருக்கின்றான். அவன் அவர்களின் நிலைமைகளை நன்கு அறிவதுடன், மேலும் அவர்கள் சொல்கின்ற வற்றைக் கேட்டுக் கொண்டும், அவர்கள் செய்கின்றவற்றைப் பார்த்துக் கொண்டும் அவர்களின் விடயங்களைப் பராமரித்துக் கொண்டும் இருக்கின்றான். மேலும் ஏழைகளுக்கு உணவளிக் கின்றான், மனம் உடைந்தவர்களை பொறுத்து விடுகிறான். அவன் நாடியவர்களுக்கு ஆட்சியை வழங்குகிறான். மேலும், அவன் நாடியவரிடம் இருந்து ஆட்சியை கைப்பற்றுகிறான். மேலும் தான் நாடியவர்களை மேன்மைப் படுத்துகிறான். தான் நாடியவர்களைத் தாழ்வுறச் செய்கிறான். நன்மை யாவும் அவன் கைவசமே இருக்கின்றன. யாவற்றின் மீதும் அவன் மிகவும் சக்தி கொண்டவனாக இருக்கின்றான் என்றும் நாம் விசுவாசம் கொள்வது கட்டாயம் ஆகும். எவன் மேற்சொன்ன விடயங்களை உடையவனாக இருக்கின்றானோ, அவன் தன் அர்ஷில் அவர்களுக்கு மேலே இருந்தாலும் கூட உண்மையில் அவனின் அறிவும் கண்காணிப்பும் பார்வையும் தன் படைப்புகளுடன் தான் இருக்கிறது.

இறைவன் தனது சிருஷ்டிகளோடு கலக்காமலே அர்ஷில் இருந்தவாறே படைப்புகளை அவதானிக்கிறான் என்பது பற்றிய விசுவாசம்.

*அவனைப் போன்று ஒப்பான எப்பொருளும் இல்லை; அவனே (யாவற்றையும்) செவியேற்கிறவன்; பார்க்கிறவன்.*

(அஷ்ஷூரா) 42 : 11

ஜஹமிய்யாக்களைச் சார்ந்த ஹுலூலியாக்கள் (படைத்தவன் படைக்கப்பட்ட வற்றில் புகுந்து விட்டான்) என்று நம்பக் கூடிய கூட்டத்தினரைப் போன்றும் அவர்களைப் போன்ற ஏனையவர்கள் அல்லாஹ் உலகத்தில் தன் படைப்புகளுடன் இரண்டறக் கலந்து இருக்கிறான் என்று கூறுவதைப் போன்றும், நாம் கூறக் கூடாது. அவ்வாறே கூறுகின்றவர்களை நாம் வழிகேடர்கள் அல்லது காபிர்கள் என்று கூறுகின்றோம். ஏனெனில் அவ்வாறு கூறுவது அல்லாஹ்வுக்கு பொருந்தாத குறையான, ஒரு வர்ணனையால் அவனை வர்ணிப்பதாக இருக்கின்றது.

மேலும், அல்லாஹ் கீழ்வானத்திற்கு இறங்குவது பற்றி ரஸூல் ﷺ அவர்கள் கூறியதாக அறிவிக்கப்பட்டுள்ள பின்வரும் மணிமொழி யைக் கொண்டும் நாம் விசுவாசிக்கின்றோம். அதாவது நபி ﷺ அவர்கள் கூறியுள்ளார்கள், அல்லாஹ் தஆலா ஒவ்வொரு இரவும் கீழ்வானத்திற்கு இரவில் மூன்றாம் பகுதியில் இறங்கி (மக்களுக்கு) கூறுவான், "யார் என்னிடம் பிரார்த்திக்கிறாரோ நான் அவருக்கு (அதனை) அங்கீகரிப்பேன். என்னிடம் யார் கேட்கிறாரோ அவருக்கு நான் கொடுப்பேன். யார் என்னிடம் பாவமன்னிப்புக் கோருகின்றாரோ நான் அவருக்கு மன்னிப்பேன்".

இறுதி தீர்ப்பு நாளில் இறைவனின் வருகை பற்றிய விசுவாசம் மறுமை நாளில் தன் அடியார்களுக்கு மத்தியில் தீர்ப்பு வழங்குவதற்காக வருவான் என்றும் விசுவாசிக்கிறோம். ஏனெனில், பின்வரும் அருள் மொழியில் அல்லாஹ் கூறுகின்றான்.

*"விடயம் அவ்வாறன்று, பூமி இடியாக இடிக்கப்படும் பொழுதும், உம் இறைவனுடன், மலக்குமாரும் அணி அணியாக வரும் பொழுதும், அன்றைய தினம் நரகம் கொண்டு வரப்படும் பொழுதும், மனிதன் அன்றைய தினம் (தான்) ஞாபகத்தில் எடுப்பான். அவனுக்கு எவ்வாறு ஞாபகம் வரப் போகின்றது".*

**(அல்-ஃபஜ்ர்) 89 : 21 - 23**

இறைவன் நாட்டம் பற்றிய விசுவாசம் மேலும் அல்லாஹ் தஆலா, தான் நினைத்ததை செய்வான் என்றும் விசுவாசிப்போமாக. அல்லாஹ் கூறுகின்றான்

*நிச்சயமாக உமதிரட்சகன், தான் நாடியதைத் தடையின்றிச் செய்(து) முடி(ப்)பவன்.*

(ஹூது) 11 : 107

மேலும் அவனது நாட்டம், இருவகைப்படும். அவையாவன

1. **كونية** "கவ்னிய்யா", (நடைபெறக்கூடியது) என்ற கருத்தில் உள்ளது அவன் நாடுவது இதன் மூலம் நடைபெறும். ஆனால் இந்நாட்டம் அவனுக்கு விருப்பமானதாக இருக்க வேண்டும், என்பது அவசியமில்லை. இதுதான் மஷீஆ நாட்டம் எனும் கருத்தைக் கொண்டதாகும்.

அல்லாஹ் கூறுகிறான்,

*மேலும், அல்லாஹ் நாடினால் அவர்கள் சண்டையிட்டுக் கொண்டிருந்திருக்க மாட்டார்கள். எனினும் அல்லாஹ், தான் நாடியதைச் செய்கிறான்.*

(அல்பகரா) 2 : 253

மேலும் கூறியுள்ளான்,

*நான் உங்களுக்கு நல்லுபதேசம் செய்ய நாடினாலும், அல்லாஹ் உங்களை வழிகேட்டிலேயே விட்டு விட வேண்டுமென்று அவன் நாடியிருந்தால், என்னுடைய நல்லுபதேசம் உங்களுக்கு யாதொரு பயனையும் அளிக்காது; அவன்தான் உங்களுடைய இரட்சகன்.*

(ஹூது) 11 : 34

2. **شرعية** ஷரஇய்யா என்ற வகை, இதன் பொருள் நாடியது நடக்க வேண்டும் என்பது இந்த விடயத்தில் அவசியமாக இருக்காது. ஆனால் அல்லாஹ் நாடுவது அவனுக்கு விருப்பமானதாகவே இருக்கும்.

அல்லாஹ் கூறியுள்ளான்.

*மேலும், அல்லாஹ் உங்களது தவ்பாவை (பாவமன்னிப்பை) நாடுகிறான்;*

(அன்னிஸா) 4 : 27

இவ்வாறான அவனது கௌனீ, ஷரஇய்யத்தான நாட்டம் அல்லாஹ்வின் ஞானத்தை தொடர்ந்ததாகவே இருக்கும். எனவே, பிரபஞ்சத்தில் நடைபெறக் கூடிய ஒன்றை தீர்மானித்தலும், அல்லது அல்லாஹ்வின் படைப்புகள் அவனுக்கு, மார்க்க ரீதியாக வணங்குவதும், அவற்றை நாம் அறிந்தாலும் அறியாவிட்டாலும், அல்லது அது எமது புத்திக்கு அப்பாற் பட்டதாயினும் அவைகள் அனைத்தும் அல்லாஹ்வின் (ஹிக்மா) ஞானத்திற்குட்பட்டதாகும். இதுபற்றி அல்லாஹ் கீழ் கண்டவாறு கூறுகிறான்.

*தீர்ப்பளிப்போர்களிலெல்லாம் அல்லாஹ் மிக்க மேலாகத் தீர்ப்பளிப்போனாக இல்லையா?*

**(அத்தீன்) 95 : 8**

மேலும் அல்லாஹ் கூறுகிறான்,

*உறுதியாக நம்பிக்கை கொண்ட சமூகத்தாருக்குத் தீர்ப்பளிப்பதில் அல்லாஹ்வை விட வும் மிக்க அழகானவர் யார்?*

**(அல்மாஇதா) 5 : 50**

மேலும் அல்லாஹ் தன் நேசர்களை விரும்புகிறான் என்றும் அவர்களும் அவனை விரும்புகிறார்கள் என்றும் விசுவாசிக்கின்றோம்.

அல்லாஹ் கூறுகின்றான்,

*(நபியே! மனிதர்களிடம்,) நீர் கூறுவீராக: " நீங்கள் அல்லாஹ்வை நேசிப்பவர்களாக இருந்தால், என்னை நீங்கள் பின்பற்றுங்கள்; (அவ்வாறு நீங்கள் செய்தால்) உங்களை அல்லாஹ் நேசிப்பான்;*

**(அலஇம்ரான்) 3 : 31**

மேலும் அல்லாஹ் கூறுகின்றான்,

*வேறு சமூகத்தாரை அல்லாஹ் கொண்டு வருவான்; அவன் அவர்களை நேசிப்பான்; அவர்களும் அவனை நேசிப்பார்கள்;*

**(அல்மாஇதா) 5 : 54**

மேலும் கூறுகின்றான்,

*மேலும், (இவ்வாறு துன்பங்களைச் சகித்துக் கொள்ளும்) பொறுமையாளர்களை அல்லாஹ் நேசிக்கிறான்.*

**(ஆலஇம்ரான்) 3 : 146**

*(இதில்) நீங்கள் நீதியாகவும் நடந்து கொள்ளுங்கள்; நிச்சயமாக, அல்லாஹ் நீதியாளர்களை நேசிக்கிறான்.*

**(அல்ஹுஜ்ராத்) 49 : 9**

*அல்லாஹ்வோ (இத்தகைய) நன்மை செய்வோரை நேசிக்கிறான்.*

**(அல்மாஇதா) 5 : 93**

அல்லாஹ்வின் விருப்பு வெறுப்பு பற்றிய விசுவாசம்.

அல்லாஹ் தஆலாவுக்கு தான் விதித்த சொற்கள், செயல்கள் விருப்பூட்டக் கூடியதாகும். அவற்றுக்கு மாற்றமானவை தனக்கு வெறுப்பூட்டும் என்றும் நாம் விசுவாசிக் கின்றோம்.

அல்லாஹ் கூறுகின்றான்,

*(அவனை) நீங்கள் நிராகரித்து விட்டால், நிச்சயமாக அல்லாஹ், உங்களை விட்டும் தேவையற்றவன்; இன்னும், தன் அடியார்களிடத்தில் நிராகரிப்பை அவன் பொருந்திக் கொள்வதில்லை; மேலும், நீங்கள் (அவனுக்கு) நன்றி செலுத்தினால், உங்களுக்காக அதனை அவன் திருப்தியடைவான்.*

**(அஸ் ஸுமர்) 39 : 7**

*எனினும் (உம்முடன்) அவர்கள் புறப்படுவதை அல்லாஹ் வெறுத்து, அவர்களைப் (புறப்படாது) தடுத்தும் விட்டான். "(யுத்தத்திற்கு வர முடியாது வீட்டில்) உட்கார்ந்திருப்போருடன் நீங்களும் உட்கார்ந்து விடுங்கள்" என்று (அவர்களுக்குக்) கூறப்பட்டு விட்டது.*

**(அத்தௌபா) 9 : 46**

மேலும் விசுவாசித்து, நல்லன புரிகின்றவர்களைப் பற்றி அல்லாஹ் திருப்தியடைவதாக நாம் நம்பிக்கை கொள்கிறோம்.
அல்லாஹ் கூறுகின்றான்,

*அல்லாஹ்வும் அவர்களைப் பொருந்திக் கொண்டான்; அவர்களும் அல்லாஹ்வைப் பொருந்திக் கொண்டார்கள். அது, எவர் தன் இரட்சகனுக்கு பயப்படுகிறாரோ, அவருக்குரியதாகும்.*

**(அல்பய்யினா) 98 : 8**

**அல்லாஹ்வின் கோபம் பற்றிய விசுவாசம்:** காபிர்கள் மற்றும் கோபத்தை வருவிக்கக் கூடியவர்களிடம் தான் கோபப்படுவதாக நாம் விசுவாசிக் கின்றோம்.

அல்லாஹ் கூறியுள்ளான்,

*அன்றியும், அல்லாஹ்வைப் பற்றி கெட்ட எண்ணம் எண்ணுகின்றவர்களான (வேஷதாரிகளாகிய) முனாஃபிக்கான ஆண்களையும், முனாஃபிக்கான பெண்களையும், இணைவைக்கின்ற ஆண்களையும்; இணைவைக்கின்ற பெண்களையும் (அல்லாஹ்வாகிய) அவன் வேதனை செய்வான்; வேதனையின் சுழற்சி அவர்களின் மீதிருக்கிறது; அல்லாஹ் அவர்கள் மீது கோபமும் கொண்டான்;*

**(அல்ஃபத்ஹ்) 48 : 6**

*எனினும், எவர் நெஞ்சத்தை நிராகரிப்பைக் கொண்டு விரிவடையச் செய்து (அதை ஏற்றுக்) கொண்டாரோ - அவர்கள் மீது அல்லாஹ்விடமிருந்துள்ள கோபம் உண்டு; அவர்களுக்கு (மறுமையில்) மகத்தான வேதனையுமுண்டு.*

**(அந்நஹ்ல்) 16 : 106**

**மேலும், அல்லாஹ்வின் முகம் பற்றிய விசுவாசம்:** மேலும் அல்லாஹ்வுக்கு (அவனது மகத்துவத்துக்கேற்ப) ஒரு முகம் இருக்கின்றது. அது பெரும் கண்ணியத்தைக் கொண்டும், மகத்துவத்தைக் கொண்டும் வர்ணிக்கப் படுகின்றது என்றும் நாம் விசுவாசிப்போமாக. இதுபற்றி அல்லாஹ் கீழ் கண்டவாறு கூறுகிறான்.

*கண்ணியமும், சங்கையும் உடைய உமது இரட்சகனின் (மங்களமான) முகம் மட்டுமே (அழியாது) நிலைத்திருக்கும்.*

**(அர்ரஹ்மான்) 55 : 27**

அல்லாஹ்வின் கரங்கள் பற்றிய விசுவாசம்: மேலும், அல்லாஹ்வுக்கு மிகவும் மகத்துவமும், கண்ணியமுமான இரு கரங்கள் அவனது மகத்துவத்துக்கேற்ப உண்டெனவும் நாம் விசுவாசிக்க வேண்டும்.

அல்லாஹ் கூறுகின்றான்,

*எனினும், (அல்லாஹ்வாகிய) அவனுடைய இரு கைகளோ விரிக்கப்பட்டே இருக்கின்றன; அவன் நாடியவாறெல்லாம் செலவு செய்கிறான்;*

**(அல்மாஇதா) 5 : 64**

மேலும் அல்லாஹ் கூறுகின்றான்,

*மேலும், (நபியே!) அல்லாஹ்வை அவனுடைய கண்ணியத்திற்குத் தக்கவாறு அவர்கள் மதிப்பளிக்கவில்லை; இன்னும், பூமி அனைத்தும் மறுமை நாளில் அவனுடைய (ஒரு கைப்) பிடியிலும், வானங்கள் (அனைத்தும்) அவனுடைய வலக்கையிலும் சுருட்டப்பட்டவையாயிருக்கும்; அவன் தூயவன்; இன்னும், அவர்கள் இணைவைப்பவற்றை விட்டும் அவன் மிக உயர்ந்தவன்.*

**(அல்ஜுமர்) 39 : 67**

அல்லாஹ்வின் கண்கள் பற்றிய விசுவாசம்: நிஜமாகவே, அல்லாஹ்வுக்கு இரு கண்கள் இருக்கின்றன என்றும் நாம் ஈமான் கொள்ள வேண்டும். அல்லாஹ் கூறுகின்றான்.

*மேலும், "கண்கள் முன்பாகவே, நம்முடைய அறிவிப்பின்படி, ஒரு கப்பலை நீர் செய்யும்;*

**(ஹூத்) 11 : 37**

மேலும் ரஸூல் ﷺ **அவர்கள் கூறியுள்ளார்கள்** "அல்லாஹ்வின் திரை ஒளியாகும். அதனை அவன் நீக்கிவிட்டான் என்றால், அவனது படைப்புக்களில் அவனது பார்வை சென்றடைகின்ற அளவு தூரம் உள்ளவைகளையெல்லாம் எரித்துவிடும்"

நிச்சயமாக அல்லாஹ்வுக்கு இரண்டு கண்கள் அவனது மகத்துவத்திற்கேற்ப உண்டு, என்பதை குர்ஆனையும் ஸுன்னாவையும் பின்பற்றும் அஹ்லுஸ் ஸுன்னா வல் ஜமாஅத்தினர் ஏகோபித்துக் கூறியுள்ளார்கள். மேலும் இதனை தஜ்ஜால் பற்றிய ரஸூல் ﷺ அவர்களின் ஹதீஸும் உறுதிப்படுத்துகின்றது. "தஜ்ஜால் ஒற்றைக்கண் குருடனாவான். உங்கள் இறைவன் அவ்வாறு குருடனாக இல்லை"

அல்லாஹ் கூறுகின்றான்,

*பார்வைகள் அவனை அடையாது; அவனோ பார்வைகளை அடைகிறான்; அவனே (எவரின் பார்வைக்கும் அகப்படாத) நுட்பமானவன்; நன்கு உணர்பவன்.*

(அல்அன்ஆம்) 6 : 103

மேலும், விசுவாசிகள் மறுமை நாளில் தம் இறைவனைக் காண்பார்கள் என்பது பற்றிய விசுவாசம்:

அல்லாஹ் கூறுகின்றான்,

*அந்நாளில் சில(ருடைய) முகங்கள் (சந்தோஷத்தால்) மலர்ச்சியானவையாக இருக்கும்.*

*(அவை) தங்கள் இரட்சகனை நோக்கிக்கொண்டிருக்கும்.*

(அல்கியாமா) 75 : 22, 23

அல்லாஹ்வின் பூரணமான வர்ணனைக்கு ஒப்பு வேறு ஒன்று இல்லை என்று நம்புகிறோம். மேலும் அல்லாஹ்வுக்கு சிறு தூக்கமோ, நித்திரையோ வராது என்று நாம் விசுவாசிக்க கடமைப் பட்டுள்ளோம்.

அல்லாஹ் தஆலாவின் பண்புகள் பரிபூரணமானவை என்பதால் அவனுக்கு ஒப்பாக எதுவும், யாரும் இல்லையென்றும் நாம் விசுவாசிக்க வேண்டும்.

அல்லாஹ் கூறுகின்றான்,

*அவனைப் போன்று எப்பொருளும் இல்லை; அவனே (யாவற்றையும்) செவியேற்கிறவன்; பார்க்கிறவன்.*

(அஷ்ஷூரா) 42 : 11

*அவனை சிறு துயிலும், உறக்கமும் பீடிக்காது.*

(அல்பகரா) 2 : 255

ஏனெனில் அல்லாஹ் நித்திய ஜீவனாகவும், நிதமும் நிலைத்தவனாகவும் இருக்கின்றான்.

அல்லாஹ் மிகவும் (நீதி) நேர்மையானவன். எனவே அவன் யாருக்கும் அநீதி இழைக்க மாட்டான் எனவும், அல்லாஹ் நிதமும் அவதானித்துக் கொண்டும், பூரணமாக அறிந்தவனாகவும் இருப்பதால் அவன் தன் அடியார்களின் செயல்களை மறந்தவனாக இல்லை என்றும் விசுவாசிப்போமாக.

மேலும் அல்லாஹ் நிகரற்ற அறிவாளி, பலத்த சக்தியானாகவும் இருப்பதால் பூமியிலோ வானங்களிலோ உள்ள எதுவுமே அவனை இயலாமாக்க செய்ய முடியாது.

அல்லாஹ் கூறுகின்றான்,

*அவன் யாதொரு பொருளை(ப் படைக்க) நாடினால், அதற்கு அவன் கட்டளையிடுவதெல்லாம் "ஆகுக !" எனக் கூறுவதுதான் உடனே அது ஆகிவிடும்.*

**(யாஸீன்) 36 : 82**

அல்லாஹ் பூரண சக்தியுடையவன் எனவே, அவனுக்குக் களைப்போ, சலைப்போ ஏற்படப்போவதில்லை என்றும் நாம் விசுவாசிப்போமாக.

அல்லாஹ் கூறியுள்ளான்,

*இன்னும், திட்டமாக வானங்களையும், பூமியையும், அவை இரண்டிற்கு மத்தியிலுள்ளவைகளையும் ஆறு நாட்களில் நாம் படைத்தோம்; (அதனால்) எவ்வித களைப்பும் நம்மைத் தீண்டவில்லை.*

**(காஃப்) 50 : 38**

அல்லாஹ் தனக்கு உண்டெனக் கூறிய, அல்லது அவனது றஸூல் ﷺ அவர்கள் அல்லாஹ்வுக்கு இருப்பதாகக் கூறிய பெயர்களையும், பண்பு களையும் கொண்டு ஏற்று விசுவாசிப்பது அவசியம் ஆகும். என்றாலும், நாம் எச்சரிக்கப்பட்ட இரு பெரும் விடயங்களைத் தவிர்த்துக் கொள்வோமாக. அவற்றுள்:

<u>முதலாவது</u> : (அல்லாஹ்வுக்கு) ஒப்புவமை கூறுதல், அதாவது, ஒருவர் தன் நாவால் அல்லது உள்ளத்தால் அல்லாஹ்வின் பண்புகள், படைப்புக்களின் பண்பு களைப் போன்றவை என்று கூறுவதாகும்.

**இரண்டாவது** : ஒருவர் உள்ளத்தால் அல்லது நாவால் அல்லாஹ்வின் பண்புகள் இவ்வாறு, இவ்வாறு என்று அவற்றிற்கு வடிவமைப்புக் கூறுவதாகும்.

எனவே அஹ்லுஸ் ஸுன்னா வல் ஜமாஅத்தினர்களாகிய நாம் உறைப்பதில் சிறந்தவர். அல்லாஹ்வும், அவனது ரஸூலும் அல்லாஹ்வுக்கு இல்லாதவை என்று கூறிய பண்புகளை நாமும் அவ்வாறே இல்லையென்று கூறி விசுவாசிக்க வேண்டும். ஏனெனில் இவ்வாறு மறுப்பதால் பூர்த்தியான குறையற்ற பண்புகளை உறுதிப்படுத்தக் கூடியதாக இருக்கின்றது.

அவ்வாறே அல்லாஹ்வும் ரஸூலும் விபரிக்காதவற்றை நாமும் (ஆராயாமல்) மௌனித்திருப்போமாக. நாம் இவ்வாறான கொள்கையில் இருப்பது தவிர்க்க முடியாத அவசியக் கடமையாக இருக்கின்றது.

ஏனெனில் அல்லாஹ் தனக்கு உண்டு எனக் கூறியவைகள் அல்லது தனக்கு இல்லாதவையென குறிப்பிட்டவைகள் யாவும், அல்லாஹ் தன்னைப் பற்றிய விடயங்களை அறிவித்ததும் அவனே, தன்னைப் பற்றி மிகவும் அறிந்தவனும் உண்மை உரைப்பதில் சிறந்தவனும் அழகிய பேச்சாளனும் அவனே, ஆனால் அடியார்களோ தம் இறைவனின் (எல்லா விடயங்களையும்) அறிந்தவர்களாக இருக்க மாட்டார்கள். அவ்வாறே, அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் அல்லாஹ்வுக்கு உண்டெனக் கூறியவைகளும், அல்லது ரஸூல் ﷺ அவர்கள் இறைவனுக்கு இல்லாதவைகள் என்றுரைத்தவைகளும் அல்லாஹ்வைப் பற்றிய அறிவிப்புக்களேயாகும். ரஸூல் ﷺ அவர்கள்தான் தன் இறைவனைப் பற்றி ஏனைய மக்களைவிட மிகவும் அறிந்தவராகவும், படைப்புக்களில் சிறந்த பிரசங்கியாகவும், அனைவரை விடவும் உண்மையாளராகவும், நாவன்மை மிக்கவராகவும் இருந்தார்கள்.

அல்லாஹ்வினதும், அவனின் திருத்தூதரினதும் பேச்சில் பூரண ஞானமும், உண்மையும், தெளிவும் உண்டு. எனவே, யாராலும் அதனை மறுக்கவோ அல்லது அதனை ஏற்பதில் நிலை தடுமாறவோ முடியாது.

***

# முதலாம் பாகம்

## அல்லாஹ்வைப் பற்றி விசுவாசித்தல்:-

அல்லஹ்விற்கு இருக்க வேண்டிய அல்லது இருக்கக் கூடாத பண்புகள் பற்றி நாம் சுருக்கமாகவும் அல்லது விளக்கமாகவும் கூறியதெல்லாம் திருக்குர்ஆன் மற்றும் திருத்தூதரின் வழிமுறையை அடிப்படையாகக் கொண்டும், அவ்விரண்டையும் பின்பற்றிய முன்சென்ற அறிஞர்கள் இமாம்கள் ஆகியோரின் அடிப்படையிலுமாகும்.

மேலும், அல்குர்ஆன், ஹதீஸ்களில் அல்லாஹ்வின் பண்புகள் பற்றிக் கூறும் வார்த்தைகளை அதன் வெளிக்கருத்துக்களுக்கேற்ப, அல்லாஹ்வின் பொருத்தமான பண்புகளுக்கு அவற்றின் கருத்துடன் வேறுபடாதவாறு நடைமுறைப்படுவதும் அவசியமாகும். மேலும், அல்லாஹ்வின் அருளுரையையும், ரஸூல் ﷺ அவர்களின், வழிமுறையையும் (தம் சொந்த கருத்துக்களுக்கேற்ப) மாற்றி அவற்றால் வழிதவறியோரின் பாதையை விட்டும், அவ்வாறே அல்லாஹ்வும் தூதரும் அறிவித்துக் காட்டித் தந்ததற்கு மாற்றமாக அவற்றை மாற்றி அமைத்து சொந்தக் கருத்துக்களை புகுத்தி விட்டோரின் பாதையை விட்டும் மேலும், அல்லாஹ்வும், தூதரும் கற்றுத் தந்தவற்றில் எல்லை மீறிச் சென்று (அல்லாஹ்வின் பண்புகளுக்கும், பெயர்களுக்கும்) உவமானமும், ஒப்பீடு வகை நெறியும் கூறியோரின் பாதையை விட்டும் விலகிக் கொள்வோமாக.

அல்லாஹ்வின் அல்குர்ஆனிலும், முஹம்மத் நபி ﷺ அவர்களின் வழிமுறையிலும் வந்துள்ளவைகள் யாவும் உண்மையானவை. அவையொன்றுக்கு ஒன்று முரண் அற்றவையென்று நாம் உறுதியாக அறிகின்றோம்.
**இது பற்றி அல்லாஹ் கூறுகின்றான்,**

*இந்த குர்ஆனை அவர்கள் ஆய்ந்துணர வேண்டாமா? அல்லாஹ் அல்லாதவரிடமிருந்து உள்ளதாக இது இருந்தால் இதில் அனேக முரண்பாடுகளை அவர்கள் கண்டிருப்பார்கள்.*

**(அன்னிஸா) 4 : 82**

ஏனெனில், அவ்வாறு அறிவிப்புக்களில் முரண்பாடு ஏற்பட்டால் அது அதன் ஒரு பகுதி பொய்ப்படுத்த வழிவகுக்கும். அவ்வாறு ஏற்படுவது அல்லாஹ் வினதும், ரஸூல் ﷺ அவர்களினதும் செய்தியில் ஏற்படவே முடியாத தொன்றாகும்.

யாரேனும், அல்லாஹ்வின் அல்குர்ஆனில் அல்லது ரஸூல் ﷺ அவர்களின் வழிமுறையில் அல்லது அவையிரண்டுக்குமிடையில் முரண்பாடு இருப்பதாக வாதிட்டால், அது அவரின் தீய நோக்கத்தையும், உளவழிகேட்டையும் எடுத்துக் காட்டுவதாக இருக்கும். எனவே, அவர் அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோருவாராக. மேலும் தன் வழிகேட்டை விட்டும் நீங்கிக் கொள்வாராக

யாராவது அல்குர்ஆனில், அல்லது அல்ஹதீஸில் முரண்பாடு உண்டு என்று சந்தேகிப்பாரானால் அதுவும் அவரின் குறையறிவு காரணமாகவும், சிந்திக்கும் ஆற்றல் போதாமையினாலும் அல்லது சிந்திக்கும் ஆற்றல் குறைவாலும் ஆகும். எனவே, அவர் அறிவைத் தேடிச் செல்வாராக, அவருக்கு உண்மை தெளிவாகும் வரை சிந்திப்பதில் ஈடுபடுவாராக. (அவ்வாறு சிந்தித்தும் கூட) அவர் தெளிவு பெறவில்லையாயின் விடயத்தை அதனை அறிந்தவனின் பக்கமாக பரஞ்சாட்டிவிட்டு அவனின் சந்தேகத்திலிருந்து விடுபட்டுக் கொள்வாராக. அறிவில் நிறைந்தோர், ஞானிகள் கூறுவது போல அவரும் (பின்வருமாறு கூறுவாராக) அல்லாஹ் கூறுகிறான்,

*"இதனையும் நாங்கள் விசுவாசிக்கிறோம்; (இவ்விருவகை வசனங்கள்) ஒவ்வொன்றும் எங்கள் இரட்சகனிடமிருந்து உள்ளவைதாம்"*

**(ஆலஇம்ரான்) 3 : 7**

அல்குர்ஆனிலோ, அல்லது ஹதீஸிலோ முரண்பாடு இராதது போல அவையிரண்டுக்கும் இடையில் கூட முரண்பாடும், வேறுபாடும் கிடையாது, என்பதை அறிந்து கொள்ளட்டும்.

# இரண்டாம் பாகம்

## மலக்குமார்களைப் பற்றி விசுவாசித்தல்:-

அல்லாஹ்வின் மலக்குகளைக் கொண்டு விசுவாசிப்போமாக. அல்லாஹ் கூறுகிறான்,

*(அவர்கள் அவனுடைய) கண்ணியமிக்க அடியார்கள். சொல்லைக் கொண்டு அவர்கள் முந்தமாட்டார்கள்; அவர்களோ அவனின் கட்டளையைக் கொண்டு செயல்படுவார்கள்.*

**(அல்அன்பியா) 21 : 27**

அல்லாஹ் அவர்களைப் படைத்தான். அவர்களும் அவனை வணங்கி, அவனை வழிப்படுவதில் சிரத்தை கொண்டார்கள்.

அல்லாஹ் கூறுகின்றான்,

*அவர்கள் இரவிலும், பகலிலும் துதி செய்கின்றனர்; (ஆனால் அதில்) அவர்கள் தளர்ச்சியடைவதுமில்லை.*

**(அல்அன்பியா) 21 : 20**

அல்லாஹ் அவர்களை நாம் காணாதவாறு மறைத்துள்ளான். சில வேளைகளில் அல்லாஹ் தனது சில அடியார்களுக்கு மட்டும் அவர்களை காண்பித்துள்ளான். ரஸூல் ﷺ அவர்கள் ஜிப்ரீல் (அலை) அவர்களை அவரது தோற்றத்திலேயே கண்டார்கள். அவர்களுக்கு அறுநூறு இறக்கைகள் இருந்தன, அவை அடிவானை மறைத்துக் கொண்டிருந்தன. மர்யம் (அலை) அவர்களிடம் ஜிப்ரீல் (அலை) அவர்கள் ஒரு மனித தோற்றத்தில் உருவெடுத்து வந்து இருவரும் ஒருவருக்கொருவர்

உரையாடினார்கள். அவ்வாறே ரஸூல் ﷺ அவர்களிடம் ஸஹாபாக்கள் கூடியிருக்கும் போது ஏறகனவே அறிந்திராத ஒரு மனிதரின் தோற்றத்தில் ஜிப்ரீல் (அலை) அவர்கள் வந்தார்கள். அவர்களிடம் பயணக் களைப்பு காணப்படவில்லை. மிகவும் வெண்ணிற ஆடை அணிந்தவராகவும் மிகவும் கறுத்த முடியுடையவராகவும் இருந்தார்கள். அவ்வாறாக ரஸூல் ﷺ அவர்களிடம் வந்து ரஸூல் ﷺ அவர்களின் முழங்கால்களோடு தனது முழங்காலைச் சேர்த்து, இரு கைகளையும் ரஸூல் ﷺ அவர்களின் தொடையில் வைத்தவாறு ரஸூல் ﷺ அவர்களிடம் உரையாட, ரஸூல் ﷺ அவர்களும் ஜிப்ரீல் (அலை) அவர்களுடன் கதைத்தார்கள். பிறகு ரஸூல ﷺ அவர்கள் தன்னிடம் (சற்று முன்னர்) வந்திருந்தவர் ஜிப்ரீல் (அலை) என்று தன் தோழர்களுக்குக் கூறினார்கள்.

மலக்குமார்கள் சில வேலைகளுக்குப் பொறுப்பாக நியமிக்கப்பட்டுள்ளார்கள் என்றும் நாம் விசுவாசிக்க வேண்டும். அவர்களுள், ஜிப்ரீல் (அலை) அவர்கள் வஹீ எனும் வேத வெளிப்பாட்டுக்குப் பொருப்பானவர்கள். அல்லாஹ்விடமிருந்து அவனின் தூதர்கள் நபிமார்களுள் அவன் நாடியவர்களுக்கு அவனது வஹீயை எடுத்து வருகின்றவரே இவர்.

மேலும், மீகாஈல் எனப்படுபவர் மழை பெய்விக்கவும், புற்பூண்டுகள் வளரச் செய்யவும் பொறுப்பானவர்களாக உள்ளனர்.

இஸ்ராபீல் எனும் மலக்கு, உலகம் அழியும் போதும் மக்களை எழுப்பும் போதும் ஊதுகுழலுக்கு பொறுப்புக் கொடுக்கப்பட்டுள்ளார்.

மலக் அல்-மௌத் என்பவர் உயிர்கள் மரணிக்கும் போது அவற்றின் உயிர்களைக் கைப்பற்றும் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டவர்.

மலைகளின் மலக்கு என்பவர் மலைகளுக்குப் பொறுப்பானவர்.

அவ்வாறே நரகத்தின் அதிபதியான மலக்கு அதற்குப் பொறுப்பாக உள்ளார்.

மேலும் கர்ப்பப்பையில் உள்ள சிசுக்களுக்குக் கூட பொறுப்பாக பல மலக்குகள் உள்ளனர். வேறு பலர் மனித இனத்தினரைப் பாதுகாக்கவென

சாட்டப்பட்டுள்ள அதே வேளை இன்னும் பலர், மக்களின் செயல்களைக் குறித்து வைக்கும் பொறுப்புடையவர்களாகவும் உள்ளனர். எனவே, ஒவ்வொரு தனிமனிதனுக்கும் இரண்டு மலக்குகள் வீதம் உள்ளனர்.

அல்லாஹ் கூறுகின்றான்,

*வலது புறத்திலும், இடது புறத்திலும் அமர்ந்து (செயல்களை) எடுத்தெழுதும் இரு (வான)வர் எடுத்தெழுதும் சமயத்தில்*

*அவனிடம் (அதை) எழுத எதிர்பார்த்து தயாராக இருக்கின்ற கண்காணிப்பாளர் இருந்தே தவிர சொல்லால் எதையும் அவன் மொழிவதில்லை; (அவன் கூறுபவை அனைத்தும் பதியப்படுகின்றது.)*

(காஃப்) 50:17,18

வேறு பல மலக்குமார்கள் உள்ளனர். அவர்கள் தாம், இறந்த சடலம் மண்ணில் புதைக்கப்பட்ட பின்னர் அதனிடம் கேள்விகள் கேட்கப் பொறுப்பாக்கப்பட்டவர்கள். எனவே, ஒவ்வொருவரும், இறந்து, அடக்கம் செய்யப்பட்டதும், அவரிடம் இரு வானவர்கள் வந்து அவரின் இறைவனையும், அவரின் மார்க்கத்தையும், அவரின் நபியையும் பற்றி வினவுவார்கள்.

அல்லாஹ் கூறுகின்றான்,

*விசுவாசம் கொண்டுள்ளார்களே அத்தகையோரை, இம்மை வாழ்விலும், மறுமையிலும் (ஷஹாதத்துக் கலிமாவை கூறுவதன் மூலம்) உறுதியான சொல்லைக் கொண்டு அல்லாஹ் நிலைப்படுத்துகிறான்; மேலும் அல்லாஹ், அநியாயக் காரர்களை (அவர்களுடைய பாவத்தின் காரணமாக)த் தவறான வழியில் விட்டும் விடுகிறான்; மேலும் அல்லாஹ் தான் நாடியதைச் செய்கிறான்.*

(இப்ராஹீம்) 14 : 27

மேலும் சில மலக்குகள் சுவனவாசிகளுக்குப் பொறுப்பானவர்களாக உள்ளனர்.

அல்லாஹ் கூறுகின்றான்,

*மலக்குகளும் ஒவ்வொரு வாசலிலிருந்து அவர்களிடம் பிரவேசிப்பார்கள்.*
*"நீங்கள் (உங்கள் வாழ்க்கையில் கஷ்டங்களைப்) பொறுத்துக் கொண்டதன் காரணமாக, உங்களுக்குச் சாந்தி உண்டாவதாக! (உங்களுடைய இந்தக்) கடைசி வீடு மிக்க நல்லதாயிற்று" (என்று அவர்களிடம் கூறுவார்கள்).*

(அர்ரஃது) **13 : 23, 24**

வானத்தில் நிறுவப்பட்டுள்ள பைத்துல் மஃமூர் என்ற அல்லாஹ்வின் வீட்டில் தினமும் எழுபதாயிரம் வானவர்கள் நுழைவதாகவும், இன்னொரு அறிவிப்பின்படி அவர்கள் தொழுவதாகவும் - பின்பு திரும்பவும் அதற்கு வருவதற்கு சந்தர்ப்பம் கிடைக்க மாட்டாது எனவும் அறிவிக்கப்பட்டுள்ளது.



# மூன்றாம் பாகம்

## இறைவேதங்களைப் பற்றி விசுவாசித்தல்:-

மேலும், அல்லாஹ் தஆலா தன் தூதர்களுக்கு சில வேத நூல்களை உலகத்தாரிடம் அத்தாட்சியாகவும், நல்லமல்களைப் புரிய விரும்புவோருக்கு வழிகாட்டியாகவும், அதனால் இவர்களுக்கு ஞானத்தைக் கற்றுக் கொடுக்கும் வண்ணமும், மேலும் அவர்களைப் பண்படுத்தும் வண்ணம் அல்லாஹ் (அவ்வேதங்களை) இறக்கி வைத்தான் என்று விசுவாசிப்பதும் நம் கடமையே.

ஒவ்வொரு ரஸூலுடன் தனித்தனியாக ஒவ்வொரு வேதநூலை அல்லாஹ் இறக்கி வைத்தான் என்றும் நாம் விசுவாசிக்க வேண்டும்.

அல்லாஹ் கூறுகின்றான்,

*நிச்சயமாக நாம், நம்முடைய தூதர்களை (அத்தாட்சிகளில்) தெளிவான வற்றுடன் அனுப்பிவைத்தோம்; அவர்களுடன் வேதத்தையும், மனிதர்கள் நீதியைக் கொண்டு நிலைத்திருப்பதற்காக தராசையும் இறக்கினோம்;*

**(அல்ஹதீத்) 57 : 25**

அவ்வேத நூல்களுள் நாம் பின்வருவனவை பற்றி அறிந்துள்ளோம், அவையாவன:-

### 1. தௌராத்

அதனை அல்லாஹ் மூஸா நபிக்கு இறக்கி வைத்தான். அதுதான் இஸ்ரவேலர்களுக்காக அனுப்பப்பட்ட சிறப்பான வேதநூலாகும்.
அல்லாஹ் கூறுகிறான்,

*அதில் நேர்வழியும், பிரகாசமும் இருக்கிறது; (அல்லாஹ்வுக்கு) முற்றிலும் கீழ்படிந்து நடந்த நபிமார்களும், (யூதர்களுடைய பண்டிதர்களாகிய) "ரப்பானியூன்" களும் (குருமார்களாகிய) 'அஹ்பார்'களும், அல்லாஹ்வுடைய வேதத்தைப் பாதுகாக்கப் பொறுப்புக் கொண்டவர்கள் என்பதாலும், அதற்கு சாட்சிகளாக அவர்கள் இருந்தார்கள் என்பதாலும் அதனைக் கொண்டே யூதர்களுக்கு தீர்ப்பளித்து வந்தார்கள்;*

(அல்மாயிதா) 5 : 44

## 2. இன்ஜீல்

இவ்வேதநூல் நபி ஈஸா (அலை) அவர்கள் மீது அல்லாஹ் இறக்கிவைத்த நூலாகும். அது தௌராத்தை நிருபித்து, அதனைப் பூரணப்படுத்துவதாகவே இருந்தது.

அல்லாஹ் கூறுகிறான்,

*அன்றியும், அவருக்கு இன்ஜீலை நாம் கொடுத்தோம். அதில் நேர்வழியும் பிரகாசமும் இருந்தன; அது, அவருக்கு முன்பிருந்த தவ்றாத்தை உண்மையாக்குவதாகவும், பயபக்தியுடையோருக்கு அது ஒரு நேர் வழி(காட்டி)யாகவும், நல்லுபதேசமாகவும் இருந்தது.*

(அல்மாயிதா) 5 : 46

*(முன்னர்) உங்களுக்கு விலக்கப்பட்டவைகளில் சிலவற்றை உங்களுக்கு நான் ஆகுமாக்கி வைப்பதற்காகவும்,--------,*

(ஆலஇம்ரான்) 3 : 50

## 3. ஸபூர்

இதனை அல்லாஹ் தாவூத் நபி அவர்கள் மீது இறக்கி வைத்தான்.

நபி இப்ராஹீம், நபி மூஸா (அலை) அவர்கள் மீதும் வேத ஏடுகள் அருளப்பட்டன.

## 4. ஃபுர்கான்

இறுதி நபியாம் முஹம்மத் ﷺ அவர்கள் மீது அனுப்பப்பட்ட புனித அல்குர்ஆன்.

அல்லாஹ் கூறுகிறான்,

*மனிதர்களுக்கு வழிகாட்டியாகவும், நேர்வழியை தெளிவாக்கக் கூடியதாகவும், (சத்திய அசத்தியத்தைப்) பிரித்துக் காட்டக்கூடியதாகவும் உள்ள இந்தக் குர்ஆன் இறக்கியருளப்பட்டது.*

**(அல்பகரா) 2 : 185**

*இது வேதத்திலிருந்து தனக்கு முன்னுள்ளவற்றை உண்மையாக்கி வைக்கக் கூடியதாகவும், அவற்றைப் பாதுகாப்பதாகவுமிருக்கின்றது;*

**(அல்மாயிதா) 5 : 48**

இந்த அல்குர்ஆனைக் கொண்டு அல்லாஹ் தனது ஏனைய முன் வேத நூல்களை மாற்றினான். தீயோனின் தீவினைகளையும் மாற்றம் செய்வோரின் வழிகேடுகளை விட்டும் அதனை அல்லாஹ் பாதுகாப்பதாகப் பொறுப் பேற்றுள்ளான்.

*நிச்சயமாக நாம் தான் (திக்ரு என்னும் இவ்) வேதத்தை (உம்மீது) இறக்கி வைத்தோம்; நிச்சயமாக நாமே அதனை பாதுகாப்பவர்கள்.*

**(அல்ஹிஜ்ர்) 15 : 9**

ஏனெனில், அல்குர்ஆன் ஆனது, மறுமை நாள் வரைக்கும் அனைத்து மக்களுக்கும் ஆதாரமாக நிலைத்திருக்கக் கூடியது. ஆனால், முன் வேத நூல்களோ, ஒரு காலத்துக்கு மட்டும் வரையறுத்து அனுப்பப்பட்டு வந்தவைகளே, அவற்றுள் ஏதாவது ஒன்றை மாற்றக் கூடிய ஒன்று (அல்லாஹ்விடம் இருந்து) இறக்கி வைக்கப்படும் பட்சத்திலும், அதில் மாற்றங்களும், கருத்துத் திருப்புதல்களும் ஏற்பட்டு விடும்போது அதன் காலவரை முடிந்துவிடுகிறது. இதனால், முன் வேதநூல்கள் அல்லாஹ்வால் பாதுகாக்கப் பட்டவைகளாக இருக்கவில்லை. எனவே, அவற்றுள் அநேகமான மாற்றங்களும், மேலதிக வார்த்தைகளும், குறைபாடுகளும் ஏற்பட்டன.

அல்லாஹ் கூறுகிறான்,

*யூதர்களில் சிலர், (வேத) வசனங்களை அதற்குரிய இடங்களிலிருந்து (அவற்றின் கருத்து வேறுபடும் படியான விதத்தில்) புரட்டுகின்றனர்;*

(அன்னிஸா) 4 : 46

*ஆகவே, தங்கள் கரங்களால் நூலை எழுதி, பின்னர் அதை அற்பக் கிரயத்திற்கு விற்பதற்காக "இது அல்லாஹ்விடமிருந்து வந்தது" என்றும் கூறுகிறார்களே அத்தகையோருக்குக் கேடுதான்; ஆகவே (அதை) அவர்களுடைய கரங்கள் எழுதியதனால் அவர்களுக்குக் கேடுதான்! மேலும், அவர்கள் (அதன் மூலம்) சம்பாதிப்பதனால் அவர்களுக்கக் கேடுதான்.*

(அல்பகரா) 2 : 79

*(ஆகவே, நபியே! அவர்களிடம்,) நீர் கேட்பீராக: " பிரகாசமானதாகவும், மனிதர்களுக்கு நேர் வழி காட்டக் கூடியதாகவும் (உள்ள) மூஸா கொண்டு வந்த ("தவ்றாத்" எனும்) வேதத்தை இறக்கியவன் யார்? நீங்கள், அ(வ்வேதத்)தைத் தனித் தனி ஏடுகளாகப் பிரித்து (அவற்றில் சிலவற்றை) வெளிப்படுத்துகிறீர்கள்; (உங்கள் நோக்கத்திற்கு மாறான) பெரும்பாலான வற்றை நீங்கள் மறைத்தும் விடுகிறீர்கள்;*

(அல்அன்ஆம்) 6 : 91

*நிச்சயமாக அவர்களில் ஒரு பிரிவினர் - அவர்கள் வேதத்தைக் கொண்டு - (ஓதும் போது அத்துடன் பல வாக்கியங்களைக் கலந்து) அதுவும் வேதத்திலுள்ளதுதான் என எண்ணிக் கொள்ளும் பொருட்டு தங்கள் நாவுகளைச் சாய்த்துக் கொள்கின்றனர்; அது வேதத்தில் உள்ளதும் அல்ல; அன்றியும் அவர்கள், "அல்லாஹ்விடமிருந்துள்ளது" என்றும் கூறுகின்றனர்; அது அல்லாஹ்விடமிருந்துள்ளதும் அல்ல; இன்னும் அவர்கள் நன்கறிந்தவர்களாக, அல்லாஹ்வின் மீது (இவ்வாறு) பொய்யைக் கூறுகின்றனர்.*

*எந்த ஒரு மனிதருக்கும், வேதத்தையும், ஞானத்தையும், நபித்துவத்தையும் அல்லாஹ் அவருக்குக் கொடுத்திருக்க, பின்னர் அவர், மனிதர்களிடம், "அல்லாஹ்வையன்றி எனக்கே அடியார்களாகி (என்னையே வணங்கி) விடுங்கள்" என்று கூற இயலாது;*

(ஆலஇம்ரான்) 3 : 78, 79

மேலும், அல்லாஹ் கூறுகிறான்,

*வேதத்தையுடையவர்களே! உங்களிடம் நிச்சயமாக நம்முடைய ஒரு தூதர் வந்திருக்கின்றார்; வேதத்தில், மறைத்துக் கொண்டிருந்த பல விஷயங்களை, அவர் உங்களுக்குத் தெளிவாக கூறுகிறார்;*

(அல்மாயிதா) 5 : 15

*எவர்கள் மர்யமுடைய மகன் மஸீஹை அல்லாஹ்தான் என்று கூறுகின்றனரோ அவர்கள் நிச்சயமாக உண்மையை நிராகரிப்பவர்களாகவே இருக்கின்றனர்.*

(அல்மாயிதா) 5 : 17 அல்லது 72



# நான்காம் பாகம்

## இறைத்தூதர்களைப் பற்றி விசுவாசித்தல்:-

அல்லாஹ் தன் படைப்புகளுக்காக தூதர்களை அனுப்பி வைத்தான் என்றும் நாம் விசுவாசிக்கிறோம்.

அல்லாஹ் கூறுகிறான்,

*அல்லாஹ்வின் மீது மனிதர்கள் (குற்றம் கூற) யாதொரு ஆதாரமும் இல்லாதிருப்பதற்காக, இத்தூதர்களுக்குப் பின்னரும், தூதர்கள் பலரை, (சுவர்க்கத்தைக் கொண்டு) நன்மாராயங் கூறுகின்றவர்களாகவும், (நரகத்தைக் கொண்டு) அச்சமூட்டி எச்சரிக்கின்றவர்களாகவும் (அல்லாஹ் அனுப்பி வைத்தான்) மேலும், அல்லாஹ் (யாவரையும்) மிகைத்தோனாக, தீர்க்கமான அறிவுடையோனாக இருக்கின்றான்.*

**(அன்னிஸா) 4 : 165**

அவர்களுள் முதலாமவர் நூஹ் (அலை) அவர்கள் என்றும், இறுதியானவர் நபி முஹம்மது ﷺ அவர்கள் என்றும் நாம் விசுவாசிப்போமாக.

அல்லாஹ் கூறுகிறான்,

*(நபியே!) நூஹுக்கும் அவருக்குப் பின் வந்த நபிமார்களுக்கும் நாம் வஹீ அறிவித்தவாறே, உமக்கும் நிச்சயமாக நாம் வஹீ அறிவித்தோம்;*

**(அன்னிஸா) 4 : 163**

*உங்களுடைய ஆண்களில் எவருக்கும் முஹம்மது, தகப்பனாக இருக்கவில்லை; எனினும், அல்லாஹ்வுடைய தூதராகவும், நபிமார்களுக்கு(க் கடைசி) முத்திரையாகவும், (இறுதி நபியாகவும்) இருக்கிறார்;*

**(அல்அஹ்ஸாப்) 33 : 40**

அவர்களுள் மிகவும் சிறப்பானவர் முஹம்மது நபி ﷺ அவர்கள், அடுத்தபடியாக நபி இப்ராஹீம் (அலை) அவர்கள். பின்னர் நபி மூஸா (அலை) அவர்கள், பின்னர் நபிகள் நூஹ், ஈஸா இப்னு மர்யம் ஆகிய இருவரும். பின்வரும் மறை வசனத்தில் குறித்துக் கூறப்பட்டுள்ளவர்களும் அவர்களேயாவார்கள்.

அல்லாஹ் கூறுகிறான்,

*மேலும், நபிமார்களிடமிருந்தும் உம்மிடமிருந்தும், நூஹிடமிருந்தும் இன்னும், இப்றாஹீம், மூஸா, மர்யமுடைய மகன் ஈஸா ஆகியோரிடமிருந்தும் அவர்களின் உறுதி மொழியை நாம் எடுத்த சமயத்தில் அவர்களிடமிருந்து மிக்க உறுதியான உறுதிமொழியையே நாம் எடுத்தோம் (என்பதை இவர்களுக்கு நினைவுபடுத்துவீராக! ஏனெனில்,)*

**(அல்அஹ்ஸாப்) 33 : 7**

ரஸூல் ﷺ அவர்களுக்கு அருளப்பட்ட மார்க்கம் ஏனைய அருள் மறையாம் அல்குர்ஆனில் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ள மார்க்கத்தின் சிறப்புக்களையும் உள்ளடக்கியதாகவே இருப்பதாக நாம் விசுவாசிக்க வேண்டும்.

அல்லாஹ் கூறுகிறான்,

*(விசுவாசிகளே!) மார்க்கத்திலிருந்து நூஹ்வுக்கு எதனை அவன் உபதேசித்தானோ, அதனையே உங்களுக்கும் அவன் மார்க்கமாக்கி இருக்கின்றான்; ஆகவே, (நபியே!) நாம் உமக்கு வஹீ மூலம் அறிவித்ததும், இப்றாஹீம், மூஸா, ஈஸா ஆகியோருக்கு நாம் உபதேசித்ததும் (என்னவென்றால்) நீங்கள் (ஏகதெய்வக் கொள்கையுடைய சத்திய) மார்க்கத்தை நிலை நிறுத்துங்கள்; நீங்கள் அதில் பிரிந்தும் விடாதீர்கள் (என்பதேயாகும்);*

(அஷ்ஷூறா) 42 : 13

அனைத்து தூதர்களும் படைக்கப்பட்ட மனித இனத்தைச் சேர்ந்தவர்களே எவ்வித தெய்வீகத் தன்மையும் கிடையாது என நாம் விசுவாசிக்க வேண்டும்.

முதல் தூதரான நூஹ் நபி பற்றி அல்லாஹ் பின்வருமாறு கூறினான்.

*"அல்லாஹ்வுடைய பொக்கிஷங்கள் என்னிடம் இருக்கின்றனவென்று நான் உங்களிடம் கூறவும்மாட்டேன்; நான் மறைவானவற்றை அறியவும்மாட்டேன்; நிச்சயமாக நான் ஒரு மலக்கு என்று கூறவும்மாட்டேன்.*

**(ஹூத்) 11 : 31**

இறுதி நபியான முஹம்மத் ﷺ அவர்களுக்கு பின்வருமாறு கூறுமாறு அல்லாஹ் பணித்தான்.

அல்லாஹ் கூறுகிறான்,

*"அல்லாஹ்வுடைய பொக்கிஷங்கள் என்னிடம் இருக்கின்றனவென்று நான் உங்களிடம் கூறவும்மாட்டேன்; நான் மறைவானவற்றை அறியவும்மாட்டேன்; நிச்சயமாக நான் ஒரு மலக்கு என்று கூறவும்மாட்டேன்.*

**(ஹூத்) 11 : 31**

அவ்வாறே அல்லாஹ் கூறுகிறான்,

*அல்லாஹ் நாடியதைத் தவிர எனக்கே எவ்வித நன்மை(யைச் செய்வதற்)கும், தீமை(யைத் தடுத்துக் கொள்வதற்)கும் நான் சக்தி பெறமாட்டேன்;*

**(அல்அஃராஃப்) 7 : 188**

மேலும், அல்லாஹ் கூறுகிறான்,

*"நிச்சயமாக நான் உங்களுக்கு தீங்கையோ, நன்மையையோ (செய்ய) சக்தி பெறமாட்டேன்" என்று (நபியே!) நீர் கூறுவீராக!*

*"நிச்சயமாக நான் என்னை அல்லாஹ்விலிருந்து ஒருவரும் காப்பாற்றவே மாட்டார்; அவனையன்றி ஒதுங்குமிடத்தையும் நான் பெற்றுக் கொள்ளவே மாட்டேன்" என்று (நபியே!) நீர் கூறுவீராக!*

**(அல்ஜின்) 72 : 21, 22**

தூதர்கள் ஏனைய இறையடியார்களைப் போன்றவர்கள். அல்லாஹ் அவர்களைத் தூதராகக் கொண்டு கண்ணியப் படுத்தியுள்ளான். மேலும்

அவர்கள் வணங்கக் கூடியவர்கள், அதில் உயர் அந்தஸ்துடையவர்கள் என்றெல்லாம் அல்லாஹ் அவர்களைப் புகழ்ந்து வர்ணித்துள்ளான். அவர்களுள் முதல்வரான நபி நூஹ் (அலை) பற்றி அல்லாஹ் கூறுகின்றான்

*(நபி) நூஹுடன் (கப்பலில்) நாம் ஏற்றிக் (காப்பாற்றிக்) கொண்டவர்களின் சந்ததிகளே! நிச்சயமாக அவர் (அதற்கு) மிக்க நன்றி செலுத்தும் அடியாராகவே இருந்தார்.*

(பனீ இஸ்ராயீல்) 17 : 3

இறுதித் தூதரான முஹம்மத் ﷺ அவர்கள் பற்றி அல்லாஹ் கூறுகிறான்,

*தன் அடியார் (முஹம்மது ﷺ அவர்கள்) மீது (அசத்தியத்திலிருந்து சத்தியத்தைப் பிரித்தறிவிக்கும்) ஃபுர்கானை அது அகிலத்தாருக்கு அச்சமூட்டி எச்சரிக்கை செய்யக்கூடியதாக ஆவதற்காக இறக்கிவைத்தானே அத்தகையோன் மிக்க பாக்கியமுடையவன்.*

(அல்ஃபுர்கான்) 25 : 1

ஏனைய தூதர்கள் பற்றி அல்லாஹ் கூறுகிறான்,

*(நபியே ! அல்லாஹ்வின் கட்டளைகளை நிறைவேற்றும்) ஆற்றல்களும், (மார்க்கத்தின் நுணுக்கங்களை விளங்கும்) பார்வைகளும் உடையவர்களாக இருந்த நமது அடியார்களான இப்றாஹீமையும், இஸ்ஹாக்கையும், யஃகூபையும் நினைவு கூறுவீராக !*

(ஸாத்) 38 : 45

அல்லாஹ் கூறுகிறான்,

*அன்றியும், மிக்க பலசாலியாகிய நமது அடியார் தாவூதை நினைவு கூறுவீராக! நிச்சமாக அவர் (நம் பக்கமே) மீதியாகத் திரும்பக்கூடியவராக இருந்தார்.*

(ஸாத்) 38 : 17

மேலும், அல்லாஹ் கூறுகிறான்

*மேலும் தவூதுக்கு, ஸுலைமானை அன்பளிப்பாக நாம் வழங்கினோம்; (அவர்) மிக்க நல்லடியார் நிச்சயமாக அவர், (நம் பக்கமே) மீதியாகத் திரும்புவார்.*

(ஸாத்) 38 : 30

ஈஸா (அலை) அவர்கள் பற்றி அல்லாஹ் கூறுகிறான்,

*(ஈசாவாகிய) அவர், (நம்முடைய) அடியாரே அன்றி (அவர் தெய்வம்) இல்லை; அவர் மீது நாம் அருள் புரிந்து, இஸ்ராயீலின் மக்களுக்கு அவரை ஓர் உதாரணமாக்கினோம்.*

(அல்ஜுக்ருஃப்) 43 : 59

முஹம்மத் ﷺ அவர்களின் தூதுடன் அல்லாஹ் தஆலா தூதுகளை நிறைவு செய்து, முஹம்மத் ﷺ அவர்களை மக்கள் அனைவருக்கும் (பொதுத் தூதராக) அனுப்பி வைத்தான்.

அல்லாஹ் கூறுகிறான்,

*(நபியே!) நீர் கூறுவீராக! மனிதர்களே! நிச்சயமாகவே நான் உங்கள் யாவருக்கும், அல்லாஹ்வின் தூதராக இருக்கிறேன்; அவன் எத்தகையோன் என்றால், வானங்கள் பூமியின் ஆட்சி அவனுக்கே உரியது; வணக்கத்துக்குரியவன் அவனைத் தவிர (வேறு எவரும்) இல்லை; அவனே; உயிர்ப்பிக்கிறான்; அவனே மரணிக்கச் செய்கிறான். ஆகவே, அந்த அல்லாஹ்வையும், (எழுத்தாற்றல் அற்ற) உம்மி நபியாகிய அவனுடைய (இத்)தூதரையும் நீங்கள் விசுவாசிப்பீர்களாக! அவர் எத்தகையவரென்றால் அல்லாஹ்வையும், அவனுடைய வசனங்களையும் விசுவாசிக்கின்றார்; (ஆகவே) நீங்கள் நேர்வழி பெறுவதற்காக அவரையே நீங்கள் பின்பற்றுங்கள்.*

(அல்அஃராஃப்) 7 : 158

மேலும், முஹம்மத் ﷺ அவர்களின் மார்க்கம் தான் அல்லாஹ் தன் அடியார்களுக்காக விரும்பியெடுத்த மார்க்கமாகும் எனவும், மேலும், அல்லாஹ் தஆலா எவரிடமிருந்தும் இஸ்லாம் அல்லாத வேறு ஒரு மார்க்கத்தையும் ஏற்றுக் கொள்வதில்லை எனவும் விசுவாசிக்க வேண்டும்.

அல்லாஹ் கூறியுள்ளான்,

*நிச்சயமாக, அல்லாஹ்விடத்தில் (அங்கீகரிக்கப்பட்ட) மார்க்கம் இஸ்லாமாகும்;*

(ஆலஇம்ரான்) 3 : 19

மேலும் அல்லாஹ் கூறியுள்ளான்,

*இன்றையத் தினம் உங்களுக்காக உங்களுடைய மார்க்கத்தை நான் பரிபூரணமாக்கி வைத்து விட்டேன்; என்னுடைய அருட்கொடையை உங்களின் மீது முழுமையாக்கி விட்டேன்; இன்னும், உங்களுக்காக இஸ்லாத்தை மார்க்கமாக நான் பொருந்திக் கொண்டேன்.*

**(அல்மாயிதா) 5 : 3**

அல்லாஹ் கூறுகிறான்,

*"இன்னும் இஸ்லாம் அல்லாததை மார்க்கமாக எவராவது விரும்பினால், அப்பொழுது அவரிடமிருந்து (அது) அங்கீகரிக்கப்படவே மாட்டாது; மேலும், மறுமையில், அவர் நஷ்டமடைந்தோரில் இருப்பார்."*

**(ஆலஇம்ரான்) 3 : 85**

எவரேனும், இஸ்லாம் மார்க்கமல்லாத யூதமதம், கிறிஸ்தவமதம் போன்ற ஏதாவது ஒரு மதம் அல்லாஹ்விடம் இன்றுவரையும் ஏற்றுக் கொள்ளப்பட்டதாக இருக்கின்றது என நம்புவாராயின் அவர் காபிராகி விடுகிறார். அவர் மன்னிப்புக் கோர வைக்கப்பட வேண்டும். அவ்வாறு மன்னிப்புக் கோரினால் அவர் பாவத்திலிருந்து நிரபராதியாகி விடுவார். இல்லையேல், மதம் மாறியவர் என்ற குற்றச்சாட்டில் கொல்லப்படுவார். ஏனெனில் அவர் குர்ஆனைப் பொய்ப்பித்த பாவத்தைச் செய்து விட்டார்.

அது போலவே, எவராவது முஹம்மத் ﷺ அவர்களின் வேதம் சகல மக்களுக்கும் பொதுவானது என்பதை மறுப்பாராயின் அவர் ஏனைய தூதர்களையும் மறுத்தவராவார். இல்லை தான் விசுவாசங் கொண்டு பின்பற்றுவதாக நினைத்துக் கொண்டிருக்கும் அந்த ரஸூலைக் கூட நிராகரித்து விட்டவராகிறார்.

அல்லாஹ் கூறுகிறான்,

*நூஹுடைய சமூகத்தார் (நம்மால் அனுப்பப்பட்ட) தூதர்களைப் பொய்யாக்கினார்கள்.*

**(அஷ்ஷுஅரா) 26 : 105**

மேலும் அல்லாஹ் கூறுகிறான்,

*நிச்சயமாக அல்லாஹ்வையும், அவனுடைய தூதர்களையும் நிராகரித்துவிட்டு, இன்னும் அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதர்களுக்கும் இடையில் பாகுபாடு செய்வதை நாடி, "(தூதர்களில்) சிலரை நாம் விசுவாசிப்போம்; இன்னும் சிலரை நாம் நிராகரிப்போம்" எனவும் கூறி, (நிராகரிப்பு, விசுவாசம் ஆகிய) இவற்றிற்கு மத்தியில் ஒரு பாதையை ஏற்படுத்தவும் நாடுகிறார்களே அத்தகையோர்*

**(அன்னிஸா) 4 : 150**

முஹம்மது ﷺ அவர்களுக்குப் பிறகு வேறு நபி இருக்கமுடியாது என்றும் நாம் விசுவாசிக்க வேண்டும். அவ்வாறு முஹம்மத் நபி ﷺ அவர்களுக்குப் பிறகு ஒரு நபி இருப்பதாக வாதிட்டால், அல்லது அவ்வாறு வாதிட்ட ஒருவரை உண்மைப் படுத்தினால் அவரும் காபிராகிவிடுகிறார். ஏனெனில், அவர் அல்லாஹ்வையும், அவனின் தூதரையும், இஸ்லாமிய சமுதாய தீர்ப்பையும் பொய்ப்பித்தவராகிறார்.

அவ்வாறே ரஸூல் ﷺ அவர்களுக்குப் பிறகு நேர்வழி பெற்ற சில கலீபாக்களை ரஸூல் ﷺ அவர்கள் தன் சமுதாயத்தின் அறிவு, அழைப்பு, மு..மின்களின் ஆட்சிப் பொறுப்பு ஆகியவற்றுக்காக நியமித்து விட்டு மறைந்தார்கள் என்றும், அவர்களுள் மிகவும் சிறப்புக்குரியவரும், பதவிக்குத் தகுதியானவரும் ஹஸ்ரத் அபூபக்கர் ஸித்தீக் رضي الله عنه அவர்களாவார்கள். அடுத்தாக உமர் இப்னு கத்தாப் رضي الله عنه அவர்கள், பின்னர் உஸ்மான் இப்னு அப்பான் رضي الله عنه அவர்கள், பின்னர் அலி இப்னு அபூதாலிப் رضي الله عنه அவர்கள் என்றும் நாம் விசுவாசிக்க வேண்டும்.

அவர்கள் எவ்வாறு சிறப்பில் முக்கியத்துவம் பெற்றார்களோ அவ்வாறே ஆட்சியிலும் இருந்தார்கள். பரந்த ஞானம் மிக்க இறைவன் நூற்றாண்டு களுக் கெல்லாம் சிறந்த நூற்றாண்டான அக்கால கட்டத்தில் ஆட்சிக்கு மிகவும் பொருத்தமானவர்களையும், மக்களுள் சிறந்தவர்களையுமே அதில் அமர்த்தக் கூடியவனாக இருந்தான்.

அவர்களுள் இவ்வாறு சிறப்பிக்கப்பட்ட ஒருவர் தன்னைவிடச் சிறப்பான ஒருவரை விடவும் ஏதாவதொரு சிறப்பம்சத்தால் மேன்மை பெற்றிருக்கலாம். எனினும், (இதன் காரணமாக) பொதுவாகச் சிறப்புப் பட்டம் பெற்றவரைவிட

அவர் சிறப்புக்குரியவராகார். ஏனெனில், ஒருவருக்குச் சிறப்பைப் பெற்றுக் கொடுக்கும் காரணிகள் பல, பலவகையானவை.

மேலும், இந்த (இஸ்லாமிய) சமுதாயமே ஏனைய சமுதாயங்களைவிட அல்லாஹ்விடம் மிகவும் மேலானதாக உள்ளது.

அல்லாஹ் கூறியுள்ளான்,

*(விசுவாசங் கொண்டோரே!) மனிதர்களுக்காக தோற்றுவிக்கப்பட்ட (சமுதாயத்தார்களிலெல்லாம்) மிக்க மேன்மையான சமுதாயமாக நீங்கள் இருக்கிறீர்கள்; (ஏனெனில்) நன்மையான காரியங்களை நீங்கள் ஏவுகிறீர்கள்; தீமையை விட்டும் (அவர்களை) நீங்கள் விலக்குகிறீர்கள்; மேலும், நீங்கள் அல்லாஹ்வை விசுவாசிக்கின்றீர்கள்.*

**(ஆலஇம்ரான்) 3 : 110**

இந்த சமுதாயத்தில் ஸஹாபாக்களே முதற் சிறப்புடையவர்கள். அவர்களையடுத்து தாபிஈன்கள், பின்னர் அவர்களைத் தொடர்ந்தவர்கள் சிறப்புமிக்கவர்கள் என்றும் விசுவாசிக்க வேண்டும்.

அவ்வாறே இந்த சமுதாயத்தில் ஒரு பகுதியினர், இன்றுவரை கூட உண்மைக்கு எடுத்துக்காட்டாக, உண்மையில் நிலைத்தவர்களாக இருக்கின்றார்கள். அவர்களை யார்தான் தாழ்த்திவிட்டாலும், அல்லது அவர்களுக்கு யார்தான் மாறு செய்தாலும் அல்லாஹ்வின் கட்டளை வரும் வரைக்கும், இவர்களுக்கு எவ்வித பாதிப்பும் உண்டாகிவிடப் போவதில்லை என்றும் நாம் நினைக்க வேண்டும்.

மேலும், ஸஹாபாக்களுக்கிடையே ஏற்பட்ட கருத்து வேறுபாடுகள் யாவும் அவர்கள் குர்ஆனை விளங்குவதிலும், அவர்கள் கொடுத்த கருத்துக்களால் அதை மற்றவர்கள் விளங்குவதில் ஏற்பட்ட கருத்து வேறுபாடேயாகும். இம்முயற்சியில் இவர்கள் சரியான கருத்து சொன்னவருக்கு இரு நன்மையும், பிழையான கருத்துடையவருக்கு அவரின் முயற்சிக்கு ஒரு நன்மை மாத்திரமே. அவரின் பிழைகூட மன்னிக்கப்படக் கூடியது எனவும் நாம் நம்புவது அவசியம்.

அவர்கள் மூலம் ஏதும் தவறுகள் சம்பவித்திருப்பின் அவற்றைப் பிரஸ்தாபிப்பதை விட்டும் தவிர்ந்து கொள்வது கடமையாகும். அவர்களின்

செயல்களுள் போற்றத் தகுமானவைகளையே அவர்களுக்கு நினைவில் கூற வேண்டும். அவர்கள் மீதும் பொறாமையும், வஞ்சனையும் ஏற்படாமல் எம்மைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும்.

அல்லாஹ் கூறியுள்ளான்,

*உங்களில் (மக்கா) வெற்றிக்கு முன்னர் யார் (தன் பொருளைச்) செலவு செய்து, யுத்தமும் புரிந்தாரோ அவருக்கு உங்களில் (யாரும்) நிகராகமாட்டார். (முந்திய) அவர்கள், (மக்கா வெற்றிக்குப்) பிறகு செலவும் செய்து போரிட்டார்களே அத்தகையோரைவிட பதவியால் மிக மகத்தானவர்கள்; (எனினும்,) ஒவ்வொருவருக்கும் அல்லாஹ் நன்மையையே வாக்களித்து இருக்கிறான்.*

(அல்ஹதீத்) 57 : 10

*மேலும், அவர்களுக்குப் பின் வந்தார்களே அத்தகையவர்கள் "எங்கள் இரட்சகனே! எங்களையும், விசுவாசங் கொள்வதில் எங்களை முந்தி விட்டார்களே அத்தகைய எங்களுடைய சகோதரர்களையும் நீ மன்னித்தருள்வாயாக! விசுவாசங் கொண்டவர்களைப் பற்றி எங்களுடைய இதயங்களில் வெறுப்பை ஆக்காதிருப்பாயாக! எங்கள் இரட்சகனே! நிச்சயமாக மிக்க இரக்கமுடையவன்; மிகக் கருணையுடையவன்" என்று (பிரார்த்தனை செய்தும்) கூறுவார்கள்.*

(அல்ஹஷ்ரு) 59 : 10



# ஐந்தாம் பாகம்

## மறுமை நாளைப் பற்றி விசுவாசித்தல்:-

மறுமை நாளைக் கொண்டும் விசுவாசிப்பது கடமையாம். மறுமை நாள் என்பது, மக்கள் எழுப்பப்படும் இறுதி நாள். அந்நாளுக்குப் பிறகு வேறு நாள் கிடையாது. அன்றைய தினம் மக்களை அல்லாஹ் உயிரோடு எழுப்புவான். எதற்காக, அவர்களை ஒன்றில் சுவர்க்கத்தின் இன்பத்தில் அல்லது கடுமையான நரக வேதனையில் நிலைக்கச் செய்வதற்காக.

நாம் மீள எழுப்பப்படும் நாளைக் கொண்டும் விசுவாசிப்பதும் கடமை. அன்றைய தினம் ஊதியில் இஸ்ராபீல் இரண்டாம் தடவையாக ஊது குழலை ஊதும் போது இறந்து போயிருந்தவர்கள் எல்லோரையும் அல்லாஹ் மீண்டும் எழுப்புவான்.
அல்லாஹ் கூறுகிறான்,

*மேலும், ஸூர் (குழல்) ஊதப்படும்; பின்னர் வானங்களில் இருப்பவர்களும், பூமியில் இருப்பவர்களும் - அல்லாஹ் நாடியவர்களைத் தவிர - மூர்ச்சித்துச் செத்தழிந்து விழுந்து விடுவார்கள்; பிறகு அதில் மறுமுறை ஊதப்படும்; அப்போது அவர்கள் (அல்லாஹ்வின் கட்டளைகளை எதிர்) பார்ப்பவர்களாக (யாவரும் உயிர் பெற்று) எழுந்து நிற்பார்கள்.*

(அல்ஜுமர்) 39 : 68

அப்போது எல்லா மக்களும், தம் இறைவனான அல்லாஹ்விடம் பாதணிகள் கலைந்தவர்களாகவும், ஆடையற்றவர்களாகவும், விருத்த சேதனம் செய்யப்படாதவர்களாகவும் தம் அடக்கஸ்தலங்களில் இருந்து எழுப்பப்படுவார்கள்.

அல்லாஹ் கூறுகிறான்,

*முதல் படைப்பை நாம் ஆரம்பித்தது போன்றே அதை நாம் (திரும்பவும்) மீளவைப்போம். (இது) நம் மீது கட்டாயமான வாக்குறுதியாகும். நிச்சயமாக நாம் (இதை) செய்வோராய் இருக்கிறோம்.*

(அல்அன்பியா) 21 : 104

மேலும், பட்டோலைகள் (மக்களின் செயல் பதிவு ஏடுகள்) வலக்கரங்களில் அல்லது முதுகுக்குப் பின்னால் இடக்கரங்களில் கொடுக்கப்படும் எனவும் விசுவாசிக்கிறோம்.

அல்லாஹ் கூறுகிறான்,

*எனவே, (அந்நாளில்) எவர் அவருடைய பதிவுப் புத்தகத்தை அவருடைய வலக்கையில் கொடுக்கப்பட்டாரோ --*

*அவர் மிக்க இலகுவான (கேள்வி) கணக்காக கணக்குக் கேட்கப்படுவார்.*

*இன்னும், அவர் மகிழ்ச்சியுடன் (சுவனத்திலுள்ள) தன்னுடைய குடும்பத்தாரிடம் திரும்புவார்.*

*மேலும், எவர் - அவருடைய பதிவுப் புத்தகத்தை அவருடைய முதுகுக்குப் பின்னால் கொடுக்கப்பட்டாரோ--*

*அவர் (தனக்குக் கேடுதான் என்றுகூறி) அழிவை(யே) அழைப்பார்.*

*நரகத்திலும் அவர் நுழைவார்.*

(அல்இன்ஷிகாக்) 84 : 7 - 12

மேலும், அல்லாஹ் கூறுகிறான்,

*மேலும் ஒவ்வொரு மனிதனின் செயலைப் பற்றிய (தினசரிக்) குறிப்பை அவனுடைய கழுத்தில் அவனுக்கு நாம் மாட்டி இருக்கிறோம்; மறுமை நாளில் அவனுக்காக ஒரு புத்தகத்தையும் வெளிப்படுத்துவோம்; அவன் அதனை விரிக்கப்பட்டதாகப் பெற்றுக் கொள்வான்.*

(பனீ இஸ்ராயீல்) 17 : 13

மறுமை நாளில் எமது செயல்கள் நிறுவையில் நிறுக்கப்படும் என்றும் அதில் எவரும் எந்த விடயத்திலும் அநியாயம் இழைக்கப்பட மாட்டார்கள் என்றும் நாம் விசுவாசிக்கிறோம்.

அல்லாஹ் கூறுகிறான்,

*எனவே, எவர் ஓர் அணுவளவு நன்மையைச் செய்தாரோ அவர் (மறுமையில்) அத(ன் பய)னைக் கண்டு கொள்வார்.*

*இன்னும், எவர் ஓர் அணுவளவு தீமையைச் செய்தாரோ அவர் (மறுமையில்) அத(ன் பய)னைக் கண்டு கொள்வார்.*

(அல்ஸில்ஸிலா) 99 : 7, 8

மேலும் அல்லாஹ் கூறுகிறான்,

*ஆகவே, எவர்களுடைய (நன்மையின்) எடைகள் கனமாக இருக்கின்றனவோ அவர்கள்தாம் வெற்றியாளர்கள்.*

*இன்னும் எவர்களுடைய (நன்மையின்) எடைகள் கனம் குறைந்து இருக்கின்றனவோ, அவர்கள் தங்களுக்குத் தாங்களே நஷ்டத்தையுண்டு பண்ணிக் கொண்டவர்கள்; (அவர்கள்) நரகத்தில் நிரந்தரமாக(த் தங்கி) இருப்பவர்கள்.*

*அவர்களுடைய முகங்களை, (நரகத்தின்) நெருப்புப் பொசுக்கும்; அதில் அவர்கள் விகாரமானவர்களாகவும் இருப்பார்கள்.*

(அல்முஃமினூன்) 23 : 102 - 104

மேலும் அல்லாஹ் கூறுகிறான்,

*எவர் ஒருவர் ஒரு நன்மையைச் செய்கிறாரோ அவருக்கு (நன்மைகளில்) அதைப் போன்றவை பத்து (பங்கு) உண்டு; எவர் ஒருவர் ஒரு தீமையைச் செய்கிறாரோ, அதைப் போன்றதைத் தவிர (அதிகமாக) அவருக்குக் கூலியாக கொடுக்கப்பட மாட்டாது; அவர்களோ அநியாயம் செய்யப்பட மாட்டார்கள்.*

(அல்அன்ஆம்) 6 : 160

ரஸூல் ﷺ அவர்களுக்கு விஷேடமான ஒரு சிபாரிசு இருப்பதை நாம் விசுவாசிக்க வேண்டும். மறுமை நாளில் கஷ்டங்களும், துன்பங்களும் தாங்க முடியாத போது, மக்கள் ஆதம் (அலை) அவர்களிடம் போவார்கள் பின்பு நூஹ் நபியிடமும், பின்னர் இப்ராஹீம் நபியிடமும் பின்னர் மூஸா நபியிடமும் பின்னர் ஈஸா நபியிடமும் சென்று இறுதியாக முஹம்மத் ﷺ அவர்களிடம் போவார்கள். அப்போது முஹம்மத் ﷺ அவர்கள் அல்லாஹ்வின் அனுமதியுடன் அவனின் அடியார்களிடம் தீர்ப்பு வழங்குவதற்கு அவனிடம் சிபாரிசு செய்வார்கள்.

மேலும் இச்சிபாரிசு காரணமாக விசுவாசிகளுள் நரகத்தை அடைந்தவர்கள் நரகத்திலிருந்து வெளியேறுவார்கள் என்று விசுவாசிக்க வேண்டும். இந்த சிபாரிசு ரஸூல் ﷺ அவர்களுக்கும் ஏனைய நபிமார்கள், இறைவிசுவாசிகள், மலக்குமார்கள் அனைவருக்கும் உரியது. அல்லாஹு தஆலா விசுவாசிகளுள் ஒரு பகுதியினரை யாருடைய சிபாரிசும் இன்றி அவனது சிறப்பாலும், கருணையாலும் நரகத்திலிருந்து வெளியேற்றிவிடுவான்.

மேலும், ரஸூல் ﷺ அவர்களுக்குரிய தடாகம் பற்றியும் விசுவாசிக்க வேண்டும். அதன் தண்ணீர் பாலைவிட கடும் வெண்ணிறமானதாகும். தேனை விட மிகவும் இனியது. கஸ்தூரி வாடையைவிட மிகவும் நறுமணம் மிக்கது. அதன் தொலைவு ஒரு மாத கால தூரத்தையுடையது போலவே அதன் அகலமும் ஒரு மாத கால தூரத்தையுடையது. அதன் பாத்திரங்கள் வானத்தில் மின்னும் நட்சத்திரங்களைப் போல அழகானவைகளாகவும் அதிகமானவைகளாகவும் இருக்கும். முஹம்மத் ﷺ அவர்களின் சமுதாயத்தை சேர்ந்த விசுவாசிகள் அதற்கு வந்து அருந்துவார்கள். அதில் இருந்து யார் நீர் அருந்தினாரோ அவர் பிறகு தாகிக்கவே மாட்டார்.

மேலும், நரகத்தின் மேல் போடப்பட்டுள்ள பாலத்தைப் பற்றியும் விசுவாசிப்பது அவசியம். மக்கள் அதனில் தத்தமது செயல் வித்தியாசம் படி நடை போடுவார்கள். எனவே, அதில் நடக்கும் முதலாமவர் மின்னல் வேகத்தில் அதனைக் கடந்து விடுவார். அடுத்தபடியானவர் காற்று வேகத்திலும், அதனையடுத்து பறவையின் வேகத்திலும், அதனை அடுத்து மனிதனின் நடையின் வேகத்திலும் கடப்பார்கள். அப்போது ரஸூல் ﷺ அவர்கள் அந்த பாலத்தில் நின்று "இறைவா, ஈடேற்றம் அடையச் செய்வாயாக" எனக்

கூறுவார்கள். இவ்வாறிருக்க, அடியார்களின் செயல்களின் பலஹீனம் காரணமாக சிலர் தவழ்ந்தவாறு வருவார்கள். அப்போது பாலத்தின் இரு மருங்குகளிலும் சில கொக்கிகள் கொளுகப்பட்டிருக்கும். அவை ஏவப்பட்டவைகளாக இருக்கும். அது எவ்வாறு ஏவப்பட்டதோ, அவ்வாறே செய்யும். அமலில் கொஞ்சம் குறையுள்ளவர்கள் தப்பிவிடுவார்கள். மற்றவர்கள் நரகத்தில் முகம் குப்புற விழுந்து விடுவார்கள். இந்த (மறுமை) நாள் பற்றியும் அதன் பயங்கரங்கள் பற்றியும் அல்குர்ஆனிலும் ஹதீஸிலும் வந்த அனைத்து செய்திகளைக் கொண்டும் விசுவாசிப்பது அவசியமாகும். அதனை விட்டும் அல்லாஹ் எமக்கு உதவி புரிவானாக.

மேலும் சுவர்க்க வாசிகள் சுவனம் புக, ரஸூல் ﷺ அவர்களின் சிபாரிசு பற்றியும் விசுவாசிப்போமாக. இந்த சிபாரிசு ரஸூல் ﷺ அவர்களுக்கு மாத்திரம் விசேசமானதாகும்.

அவ்வாறே, சுவர்க்கம் நரகம் ஆகியவற்றைக் கொண்டு நாம் விசுவாசிக்க வேண்டும். இறைவனை அஞ்சி வாழ்ந்த, இறை விசுவாசிகளுக்காக அல்லாஹ° தஆலா தயாரித்து அமைத்த இன்ப வீடு தான் சுவர்க்கம். அந்த சுகம் எப்படியானதென்றால், அதனை எந்த ஒரு கண்ணும் பார்த்திராது எந்த ஒருகாதும் கேட்டிராது. எந்த ஒரு மனித உள்ளத்திலும் தோன்றியிராது.

அல்லாஹ் கூறுகிறான்

*ஆகவே, அவர்கள் செய்து கொண்டிருந்தவற்றுக்குக் கூலியாக, அவர்களுக்காக மறைத்து வைக்கப்பட்டிருக்கும் கண்களின் குளிர்ச்சியை எந்த ஒரு ஆத்மாவும் அறியாது.*

**(அஸ்ஸஜதா) 32 : 17**

அநியாயக் காரர்களான, இறை நிராகரிப்பாளர்களுக்காக அல்லாஹ் தயார் செய்த வேதனைக்குரிய இல்லம் தான் நரகம். கற்பனை பண்ண முடியாத வேதனையும், துன்பமும் நரகில் உண்டு.

அல்லாஹ் கூறுகிறான்,

*(ஆனால் இதை நிராகரிக்கும்) அநியாயக் காரர்களுக்கு நிச்சயமாக நாம் நரகத்தை தயார்படுத்தி உள்ளோம்; அந்நரகத்தின் சுவர்கள் அவர்களைச்*

*சூழ்ந்து கொண்டு விட்டது; அவர்கள் (தண்ணீர் கேட்டு) இரட்சிக்கத் தேடினால், சூட்டின் உச்சத்தை அடைந்த - பழுக்கக் காய்ச்சப்பட்டதைப் போன்ற தண்ணீரைக் கொண்டே அவர்கள் இரட்சிக்கப்படுவார்கள்; அது அவர்களுடைய முகங்களைச் சுட்டு கருக்கிவிடும். (அன்றி) அது மிக்க கெட்ட பானமாகும்; அவர்கள் இளைப்பாற இறங்குமிடத்தாலும் அது மிகக் கெட்டதாகும்.*

**(அல் கஹ்ஃப்) 18 : 29**

நரகமும், சுவர்க்கமும் தற்போது இருப்பதுடன், என்றுமே அவையிரண்டும் அழிந்துவிடமாட்டாது.

அல்லாஹ் கூறுகிறான்,

*மேலும் (உங்களில்) எவர் அல்லாஹ்வை விசுவாசித்து நற்செயலும் புரிகிறாரோ அவரைச் சுவனபதிகளில் அவன் பிரவேசிக்கச் செய்வான்; அவற்றின் கீழ் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும்; என்றென்றும் அவர்கள் நிரந்தரமாக அவற்றில் (தங்கி) இருப்பவர்கள்; திட்டமாக அல்லாஹ் அவருக்குரிய உணவை அழகானதாக ஆக்கிவிட்டான்.*

**(அத்தலாக்) 65 : 11**

அல்லாஹ் கூறுகிறான்,

*நிச்சயமாக அல்லாஹ் நிராகரிப்போரைச் சபித்து விட்டான்; கொழுந்து விட்டெரியும் நெருப்பை அவர்களுக்குத் தயார் செய்தும் வைத்திருக்கின்றான்.*

*அவர்கள் என்றென்றும் அதில் நிரந்தரமாக(த் தங்கி) இருப்பவர்கள்; (அவர்களைக்) காப்பவரையும், (அவர்களுக்கு) உதவி செய்பவரையும் அவர்கள் (அங்கு) காணமாட்டார்கள்.*

*அவர்களுடைய முகங்கள் (நரக) நெருப்பில் புரட்டப்படும் நாளில், "நாங்கள் அல்லாஹ்வுக்கு வழிபட்டிருக்க வேண்டுமே ! (அவனுடைய) தூதருக்குக் கீழ்ப்படிந்திருக்க வேண்டுமே" என்று கூறுவார்கள்.*

**(அல்அஹ்ஸாப்) 33 : 64 - 66**

அல்குர்ஆனும், சுன்னாவும் யாருக்கு சுவர்க்கம் உண்டென குறிப்பாக அல்லது சாடையாக கூறுகிறதோ அவ்வாறே நாமும் சான்று பகர்கின்றோம்.

ஹஸ்ரத் அபூபக்கர், உமர், உஸ்மான், அலி رضي الله عنهم போன்ற ரஸூல் ﷺ அவர்களால் குறிப்பிடப் பட்டவர்களுக்கு எம்மால் குறிப்பாக சான்று கூற முடியும்.

இறையச்சமும், இறைவிசுவாசமும் உள்ள ஒவ்வொருவருக்கும் பொதுவாக நாம் சாட்சி கூறலாம்.

அவ்வறே அல்குர்ஆனும், சுன்னாவும் யாருக்கு நரகத்தைக் கொண்டு சான்று கூறுமோ அவர்களுக்கு நாமும் குறிப்பாக அல்லது பொதுவாக சான்று கூறலாம்.

அபூ லஹப், அம்ரு இப்னு ஹிஷாம் அல்குஸாஈ போன்றோருக்குக் குறிப்பாக நாம் (நரகத்தைக் கொண்டு) சாட்சி கூறலாம்.
பெரியளவில் ஷிர்கு வைக்கக் கூடிய முஷ்ரிகுகளுக்கு, அல்லது நயவஞ்சகர்களுக்கும், ஒவ்வொரு காபிருக்கும் பொதுவாக நரகம் உண்டென நமக்கு சான்று கூற முடியும்.

கப்ருடைய பித்னா, குழப்ப நிலை பற்றியும் நாம் விசுவாசிக்க வேண்டும். கப்ரில் இறந்தவரிடம், தன் இறைவனைப் பற்றியும், தன் மார்க்கத்தை பற்றியும், தன் நபியைப் பற்றியும் கேட்கப்படுவதே கப்ரின் குழப்பம் ஆகும்.

அல்லாஹ் கூறுகிறான்,

*விசுவாசங் கொண்டுள்ளார்களே அத்தகையோரை, இம்மை வாழ்விலும், மறுமையிலும் (ஷஹாதத்துக் கலிமாவை கூறுவதன் மூலம்) உறுதியான சொல்லைக் கொண்டு அல்லாஹ் நிலைப்படுத்துகிறான்;*

**(இப்ராஹீம்) 14 : 27**

அப்போது விசுவாசி கூறுவான், என் இறைவன் அல்லாஹ், என் மார்க்கம் இஸ்லாம், என் நபி முஹம்மத் ﷺ அவர்கள் என்று. ஆனால் காபிர், நயவஞ்சகர்கள் கூறுவார்கள் எனக்குத் தெரியாது, மக்கள் எதையோ சொல்லக் கேட்டேன், அதையே நானும் சொன்னேன் என்று.

இறை விசுவாசிகளுக்கு கப்ருடைய இன்பம் உண்டெனவும் நாம் விசுவாசிக்க கடமைப் பட்டுள்ளோம்.
அல்லாஹ் கூறுகிறான்,

*அவர்கள் எத்தகையோரென்றால், (ஈமானுடன்) நல்லவர்களாக இருக்கும் நிலைமையில் மலக்குகள் அவர்(களுடைய உயிர்)களைக் கைப்பற்றுவார்கள்; அவர்களிடம் "ஸலாமுன் அலைக்கும் (உங்களுக்கு சாந்தி உண்டாவதாக!) நீங்கள் செய்து கொண்டிருந்ததன் காரணமாக சுவனபதியில் பிரவேசியுங்கள்" என்று அவர்கள் கூறுவார்கள்.*

(அந்நஹ்ல்) 16 : 32

காபிர்களான அநியாயக்காரர்களுக்கு நரகத்தின் வேதனையிருப்பது பற்றியும் நாம் விசுவாசிக்க வேண்டும்.

அல்லாஹ் கூறுகிறான்,

*இன்னும், இவ்வநியாயக் காரர்கள் மரண வேதனையிலிருக்கும் சமயத்தில் நீர் அவர்களைப் பார்ப்பீராயின், "மலக்குகள் தங்கள் கைகளை நீட்டி, (அவர்களிடம்) உங்களுடைய உயிர்களை வெளியேற்றுங்கள்; நீங்கள் உண்மையல்லாததை அல்லாஹ்வின் மீது (பொய்யாகக்) கூறிக் கொண்டிருந்ததாலும், இன்னும் அவனது வசனங்களை விட்டும் (அவற்றை ஏற்க மறுத்து) நீங்கள் பெருமையடித்துக் கொண்டிருந்ததாலும் (அதற்குப் பகரமாக) இன்றைய தினம் இழிவான வேதனையை நீங்கள் கொடுக்கப்படுகிறீர்கள்." (என்று கூறுவதை நீர் காண்பீர்).*

(அல் அன்ஆம்) 6 : 93

இவை பற்றி மிகவும் பிரபல்யமாக அனேக ஹதீஸ்கள் உள்ளன. இந்த மறைவான விடயங்கள் பற்றி அறிவிக்கும் எல்லாக் குர்ஆன், ஹதீஸ் அறிவிப்புக்களையும் நம்புவது, நம்பிக்கை கொண்ட விசுவாசிகளின் கடமையாகும். அவ்வாறே தான் உலகில் காண்கின்றவற்றை வைத்து (இறைவாக்கியங்களையும், நபி மொழிகளையும்) எதிர்ப்பதும் கூடாது. மறுமையின் விடயங்களுக்கும், உலகத்தின் விடயங்களுக்கும் இடையே பாரிய வேறுபாடு இருப்பதால் உலக விடயங்களைக் கொண்டு மறுமை விடயங்களை அளக்கக் கூடாது.

# ஆறாம் பாகம்

## விதியைப் பற்றி விசுவாசித்தல்:-

இறை நியதியின் நன்மை, தீமை இரண்டையும் கொண்டு விசுவாசிப்பதும் அவசியமாகின்றது. "கத்ரு" அதாவது இறை நியதி என்பது இறைவனின் முன் கூட்டிய அறிவு, அவனின் ஞான ஏற்பாடு ஆகியவற்றின் படி படைப்புகளுக்கு அல்லாஹ் விதித்த தீர்மானமே அது. (கத்ரு) நியதிக்கு நான்கு கட்டங்கள் உள்ளன.

## முதலாவது கட்டம், **அறிவு**:-

அல்லாஹ் தஆலா நிச்சயமாக ஒவ்வொரு பொருளையும் நன்கு அறிந்தவனாக இருக்கிறான் என்று நாம் விசுவாசிக்க வேண்டும். அல்லாஹ் தனது நிரந்தரமான பரந்த அறிவால் முன்பு நடந்தவையும், நடக்கப் போவதையும், எது எப்படி இருக்கும் என்பதையும் அல்லாஹ், அவன் நிரந்தரமாக முன்கூட்டியே அறிந்து வைத்துள்ளான். அவன் எதையும் அறியாது இருந்து விட்டுப் புதிதாக அவன் அறிவுக்குத் தோன்றுவதில்லை. அவன் ஒன்றை அறிந்தால் பின்பு அவன் அதை மறக்கவும் மாட்டான்.

## இரண்டாம் கட்டம், **எழுத்து மூலம் குறித்து வைத்தல்** :-

மறுமை நாள் வரைக்கும் தோன்றக்கூடிய அனைத்தையும் அல்லாஹ் "லௌஹுல் மஹ்பூல்" எனும் பாதுகாக்கப்பட்ட ஏட்டில் எழுதியுள்ளான் என்றும் நாம் விசுவாசிக்க வேண்டும்.

அல்லாஹ் கூறுகிறான்,

*(நபியே!) வானத்திலும், பூமியிலும் இருப்பவற்றை நிச்சயமாக அல்லாஹ் அறிவான் என்பதை நீர் அறியவில்லையா? நிச்சயமாக, இது (லவ்ஹுல்*

*மஹற்பூல் என்னும்) புத்தகத்தில் இருக்கிறது; நிச்சயமாக இது அல்லாஹ்வுக்கு மிக்க சுலபமானதாகும்.*

**(அல் ஹஜ்) 22 : 70**

## மூன்றாம் கட்டம், நாட்டம் :-

பூமியிலும், வானங்களிலும் உள்ள யாவும் அல்லாஹ் நாடியவையே என்றும், அவனின் நாட்டமின்றி எதுவும் இருக்காது என்றும், அவன் நாடியது இருக்கும், அவன் நாடாதது இருக்காது என்றும் நாம் விசுவாசிப்பது கடமையாகும்.

## நான்காவது கட்டம், படைப்பது :-

அல்லாஹ்தான் யாவற்றையும் படைத்தான் என்று நாம் விசுவாசிப்பது அவசியம் என்று, அல்லாஹ் கூறுகிறான்.

*அல்லாஹ்(வே) ஒவ்வொரு பொருளையும் படைக்கிறவன்; அவனே ஒவ்வொரு பொருளின் மீதும் பொருப்பாளனுமாவான்.*

*வானங்கள் மற்றும் பூமியின் (களஞ்சியங்களின்) சாவிகள் அவனிடமே இருக்கின்றன;*

**(அல் ஜுமர்) 39 : 62, 63**

இந்த நான்கு கட்டங்களும் அல்லாஹ்விடமிருந்து ஏற்படுகின்றவற்றையும், அவனின் அடியார்களிடமிருந்து ஏற்படுகின்றவற்றையும் உள்ளடக்கியவையாகும். அதாவது மனிதனால் ஏற்படக்கூடிய எல்லாச் சொற்களும் அல்லது எல்லாச் செயல்களும், அல்லது செய்யாமல் விடப்படுகின்றவைகளும் அல்லாஹ் ஏற்கனவே அறிந்து அவனிடம் எழுதி வைக்கப்பட்டிருந்தவைகள். அவன் அவற்றை நாடியே படைத்தான்.

அல்லாஹ் கூறியுள்ளான்,

*உங்களில் (நேர் வழியில்) நிலைத்திருக்க நாடுகிறவருக்கு (இது ஒரு அறிவுரையாகும்).*

*இன்னும் அகிலத்தாரின் இரட்சகனாகிய அல்லாஹ் நாடினாலன்றி, நீங்கள் நல்லறிவு பெற) நாடமாட்டீர்கள்.*

**(அத்தக்வீர) 81 : 28, 29**

*மேலும், அல்லாஹ் நாடினால் அவர்கள் சண்டையிட்டுக் கொண்டிருந்திருக்க மாட்டார்கள். எனினும் அல்லாஹ், தான் நாடியதைச் செய்கிறான்.*

(அல் பகரா) 2 : 253

*இன்னும், அல்லாஹ் நாடியிருந்தால் அவர்கள் இவ்வாறு செய்திருக்க மாட்டார்கள்; ஆகவே, (நபியே!) நீர் அவர்களையும், அவர்களுடைய பொய்க் கூற்றுக்களையும் விட்டு விட்டுவிடுவீராக.*

(அல் அன்ஆம்) 6 : 137

*"உங்களையும், நீங்கள் செய்கின்றவற்றையும் அல்லாஹ்வே படைத்தான்"*

(அஸ்ஸாஃப்பாத்) 37 : 96

என்றாலும் கூட, அல்லாஹ் தன் அடியார்களுக்கு சுதந்திரமும், சக்தியும் வழங்கியுள்ளான். அதன்படி அவர்கள் தம் செயல்களைத் தேர்ந்தெடுப்பார்கள் என்றும் விசுவாசிப்பது அவசியம்.

அடியானின் செயல் அவனின் தெரிவினாலும், அவனின் சக்தியாலும் நடக்கின்றன என்பதற்கு பின்வரும் விடயங்கள் ஆதாரமாக உள்ளன.

1. **பின்வரும் இறைவசனம்** :-

*ஆகவே உங்கள் விளைநிலங்களுக்கு நீங்கள் விரும்பியவாறு வாருங்கள்.*

(அல் பகரா) 2 : 223

மேலும் அல்லாஹ் கூறியுள்ளான்,

*மேலும், அவர்கள் (போர் செய்யப்) புறப்படுவதை நாடியிருந்தார்களானால், அதற்கு வேண்டிய தயாரிப்புகளை அவர்கள் செய்திருப்பார்கள்;*

(அத்தெளபா) 9 : 46

மேற் சொன்ன வசனத்தில் அல்லாஹ், தன் அடியான் அவனின் நாட்டப்படி, வருவதையும், தயார் செய்வதையும் நிரூபித்துள்ளான்.

2. <u>அடியானை நோக்கி விடப்பட்டுள்ள ஏவலும் விலக்கலும்</u> :-

அவ்வாறு அவனுக்கு சுய விருப்பமும், சக்தியும் இல்லையேல், இவ்வாறாக அவனுக்குக் கட்டளை போடுவதானது, இயலாத ஒன்றால் அவனைப் பணிப்பதாக அமையும்.

(அவ்வாறு இயலாததால் மனிதனைப் பணிப்பது) அல்லாஹ்வின் தீர்க்கமான அறிவுக்கும் அவனின் அருளுக்கும் அவனின் உண்மையான அறிவிப்புக் களுக்கும் மாற்றமானதாகும். அல்லாஹ் இது பற்றி குர்ஆனில் பின்வருமாறு கூறுகிறான்.

*அல்லாஹ் எந்த ஓர் ஆத்மாவிற்கும் அதன் சக்திக்குப்பட்டதைத் தவிர சிரமம் கொடுப்பதில்லை;*

**(அல் பகரா) 2 : 286**

3. <u>நல்லதைச் செய்யும் போது, நல்லவனைப் புகழ்வதும், தீமை புரியும் போது தீயோனை இகழ்வதும்</u> :-

அடியான் தன் நாட்டமும் சுயவிருப்பமுமின்றி எதையும் செய்கிறான் என்றால், நல்லதைச் செய்யும் அடியானைப் புகழ்வது தேவையில்லாத ஒன்றாகவும், தீமையிழைப்பவனைத் தண்டிப்பது அநியாயமாகவும் இருக்கும் எனினும், அல்லாஹ் தஆலா அவ்வாறு, அநியாயமும், வீண்பகட்டும் புரிவதைவிட்டு தூயவனாக இருக்கிறான்.

4. <u>அல்லாஹ் தஆலா தூதர்களை அனுப்பியது</u> :-

அல்லாஹ் தஆலா தூதர்களை அனுப்பினான்' எதற்காக? என்பதை அல்லாஹ் குர்ஆனில் விளக்குகிறான்,

*அல்லாஹ்வின் மீது மனிதர்களுக்கு (குற்றம் கூற) யாதொரு ஆதாரமும் இல்லாதிருப்பதற்காக, இத்தூதர்களுக்குப் பின்னரும், தூதர்கள் பலரை, (சுவர்க்கத்தைக் கொண்டு) நன்மாராயங் கூறுகின்றவர்களாகவும், (நரகத்தைக் கொண்டு) அச்சமூட்டி எச்சரிக்கின்றவர்களாகவும் (அல்லாஹ் அனுப்பி வைத்தான்).*

**(அன்னிஸா) 4 : 165**

அடியானின் செயல் அவனது சொந்த நாட்டப்படி, சுய தெரிவில் நடக்கவில்லையென்றால், அவ்வாறு தூதர்களை அனுப்பி வைப்பதால், அவனின் ஆதாரம் பிழைத்து விடமாட்டாது.

5. <u>**ஒவ்வொருவரும், ஒன்றைச் செய்வது, அல்லது விட்டு விடுவது எந்தவொரு வற்புறுத்தலும் இன்றியே என்பதை யாவரும் உணர்வர்**</u> :-

ஒரு மனிதன் எழுகின்றான், உட்காருகின்றான், நுழைகின்றான், வெளியேறுகின்றான், பயணமாகின்றான், தங்கி நிற்கின்றான் இவற்றையெல்லாம் அவன் தன் இஷ்டப்படியே செய்வான். தன்னை யாரும் இவ்விடயங்களில் வற்புறுத்துவதாக உணரமாட்டான். ஒருவர் தன் சுய விருப்பத்தில் ஒன்றைச் செய்வதற்கும், இன்னொருவரின் வலியுறுத்தல் மூலம், அதனைச் செய்வதற்கும் இடையில் உள்ள வேறுபாட்டைத் தன்னால் பிரித்தறிந்து கொள்ள முடிகின்றது. அவ்வாறே, இஸ்லாமும் இவ்விரண்டுக்குமிடையே சட்டபூர்வமாகப் பிரித்து அறிவித்துள்ளது. அல்லாஹ்வின் உரிமையில், ஒருவர் நிர்ப்பந்திக்கப்பட்டு செய்யும் செயலுக்காக அவர் தண்டிக்கப்படமாட்டார்.

ஒரு பாவி, பாவம் புரிந்து விட்டு இது அல்லாஹ்வின் "கத்ரு" விதிப்படிதான் நடந்துவிட்டது என்று காரணம் காட்டித் தப்பிக்க முடியாது ஏனெனில், அவன் தன் விருப்பப்படியே பாவம் செய்கின்றான். அந்தப் பாவத்தை அவன் செய்ய அவனுக்கு அல்லாஹ் விதித்திருந்தான், என்பதைத் தெரியாமலேயே அவன் தவறிழைக்கின்றான். ஏனெனில் இறைவிதியை அது நடைபெற முன் அறிந்துவிட யாராலும் முடியாது. நடைபெற்ற பின்புதான் அறிந்து கொள்வான். இதுபற்றி அல்லாஹ் கூறியுள்ளான்,

*எந்த ஆத்மாவும், நாளை அது எதைச் சம்பாதிக்கும் என அறியாது;*

**(லுக்மான்) 31 : 34**

ஒருவன் தனக்குத் தெரியாத ஒன்றைக் கொண்டு தான் நிரபராதி என்று எப்படி காரணம் காட்ட முடியும். இந்த வாதம் தவறு என்பதை அல்லாஹ்வின் கீழ் காணும் இறைவசனம் எடுத்துக் காட்டுகிறது.

*"அல்லாஹ் நாடியிருந்தால் நாங்களும், எங்களுடைய மூதாதையர்களும், (அல்லாஹ்வுக்கு எதனையும்) இணைவைத்திருக்க மாட்டோம்; (உண்மைக்*

*கூடிய) யாதொன்றையும் (ஆகாதென்று) நாங்கள் விலக்கியிருக்கவுமாட்டோம்" என்று, இணைவைத்துக் கொண்டிருப்போர் கூறுவார்கள்; இவர்களுக்கு முன்னிருந்தவர்களும் நம்முடைய வேதனையைச் சுவைக்கும் வரையில் இவ்வாறே (தூதர்களைப்) பொய்யாக்கிக் கொண்டிருந்தனர். (ஆகவே நீர் "உங்கள் கூற்றுக்கு) உங்களிடம் ஏதும் அறிவார்த்தமான ஆதார)முண்டா? (அவ்வாறு இருந்தால்) அதனை - நமக்கு வெளிப்படுத்திக் காட்டுங்கள்; (உங்களது அர்த்தமற்ற வீணான) எண்ணத்தையல்லாது வேறு எதையும் நீங்கள் பின்பற்றவில்லை. இன்னும் நீங்கள் அனுமானம் கொள்கிறவர்களேயன்றி வேறில்லை - என்று கூறுவீராக!*

**(அல்அன்ஆம்) 6 : 148**

இறை விதியை வைத்துத் தப்பித்துக் கொள்ள முயற்சிக்கும் பாவிக்கு நாம் கூறுவது என்னவென்றால், இதே அல்லாஹ்வின் விதியை அவனை வழிப்படுவதற்கு உனக்கு எழுதிவிட்டான் என்பதை ஏன் முன் வைப்பதில்லை ? எனவே உன்னிடமிருந்து ஒரு செயல் ஏற்படுவதற்கு முன் விதிக்கப்பட்டது எது என்பதை தெரிந்து கொள்ள முடியாதிருப்பதில் நன்மைக்கும் தீமைக்குமிடையில் வித்தியாசம் இல்லை. இதுபற்றி ரஸூல் ﷺ அவர்கள் ஸஹாபாக்களுக்கு பின்வருமாறு அறிவித்த ஹதீஸ் தெளிவு படுத்துகிறது. அதாவது நிச்சமாக சுவர்க்கத்திலும் நரகத்திலும் ஒவ்வொருவருக்குறிய இடமும் விதிக்கப்பட்டு விட்டது என்று ரஸூல் ﷺ அவர்கள் சொன்ன போது ஏன் எமது செயல்களை விட்டு விட்டு அவன் மீது பரம்சாட்டிட முடியாதா என்று ஸஹாபாக்கள் கேட்டார்கள், அதற்கு அவர்கள் இல்லை நீங்கள் அமல் செய்யுங்கள் ஏனெனில் மனிதர்கள் எதற்காக படைக்கப்பட்டார்களோ அவைகள் அவனுக்கு இலேசானதாக இருக்கும்.

எனவே பாவத்தைப் புரிந்து விட்டு இது "கத்ர்" இறைவிதிப்படிதான் நடந்து விட்டது என்று இறைவிதியை வைத்துத் தப்பித்துக் கொள்ள முயற்சிக்கும் பாவிக்குப் பின்வருமாறு பதில் கூறலாம்.

நீ மக்காவுக்குப் பயணமாக விரும்புகிறாய், மக்கா செல்ல இரு பாதைகள் உள்ளன. நம்பத் தகுந்த ஒருவர் கூறுகிறார், அவ்விரு பாதைகளிலும் ஒன்று மிகவும் பயங்கரமானதும், சிரமமானதும். மற்றப் பாதையோ அபயமானதும், இலேசானதும் என்று. எனவே நீர் இரண்டாம் பாதையான (இலேசான, அபயமான) பாதையில்தான் செல்வாய். முதலாவது பாதையான (பயங்கரமானதும், கடினமானதுமான) பாதையில் சென்று விட்டு அதனைத்தான்

அல்லாஹ் தனக்கு நாடினான் என்று உனக்குக் கூற முடியாது. ஆனால் நீ அப்படியே செய்து விட்டாய் என்றால், உன்னை மக்கள் பல ரகமான பைத்தியங்களில் ஒன்று என்றுதான் நினைப்பார்கள்.

மேலும், அவருக்குப் பின்வருமாறும் நாம் கூறலாம். உமக்கு இரு தொழில்கள் வந்தன, அவ்விரண்டில் ஒரு தொழில் நிறைந்த வருமானமும், கண்ணியமும் மிக்கது. எவ்விதக் குறையுணர்வுமின்றி உம்மால் அதனைச் செய்ய முடிகின்றது இப்படியிருக்க "இறை விதியொன்று" கூறி நீர் எப்படித் தரக்குறைவான மற்றத் தொழிலைத் தெரிவு செய்ய மாட்டாரோ அதுபோன்று தான் இதுவும். இதுபற்றி (இறைவிதி பற்றி) மேலும் அவனுக்குப் பின்வருமாறு கூறலாம். நீர் நோய்வாய்ப் பட்டால், சிகிச்சை பெறுவதற்காக ஒவ்வொரு வைத்தியரிடமும் செல்வாய், அதேவேளை சத்திர சிகிச்சையின் வேதனையையும், மருந்துகளின் கசப்பு போன்ற உனக்கு ஏற்படும் எல்லாவற்றையும் சகித்துக் கொள்வாய். அப்படியானால், உனதுள்ளம், பாவங்களைக் கொண்டு நோய்வாய்ப்படும்போது அதற்கான பரிகாரத்தை ஏன் நீ இவ்வாறு செய்வதில்லை.

மேலும், அல்லாஹ் பூரண அருள் மிக்கவன், பரந்த ஞானமுடையோன். எனவே, என்றுமே தீமையை அல்லாஹ்வுக்கு சேர்க்கப்படமாட்டாது என்று நாம் விசுவாசங் கொள்ள வேண்டும்.

ரஸூல் ﷺ அவர்கள் கூறியுள்ளார்கள்,

"தீமை உனக்குரியதல்ல" - (அறிவிப்பு : முஸ்லிம்).

அடிப்படையில் அல்லாஹ்வின் தீர்ப்பில் என்றுமே தீங்கு இல்லை. ஏனெனில், அவனின் தீர்ப்பு, விதி, ஒரு ஞான அறிவு அடிப்படையிலிருந்து தோன்றியது.

எனவே தீமை ஏற்படுவதெல்லாம் அவனால் தீர்ப்பளிக்கப் பட்டதில்தான்.

இதுபற்றி ரஸூல் ﷺ அவர்கள், ஹஸன ؓ அவர்களுக்குக் கற்றுக் கொடுத்த துஆ குனூதில் கூறியுள்ளார்கள். இங்கு விதிக்கப்பட்ட ஒன்றுடன்தான் தீமையைச் சேர்க்கப்பட்டிருக்கிறது. அத்துடன் அந்த விதிக்கப்பட்டவைகள் கூட முற்றிலும் முழுதுமாக தீமைகளல்ல. ஏனென்றால், ஒரு இடத்தில் அது தீமையாக இருப்பதுடன், வேறு ஒரு இடத்தில் நன்மையாகவும் இருக்கிறது. "இறைவா ! நீ விதித்தவற்றில், தீயதை விட்டும்

என்னை நீ பாதுகாப்பாயாக". அல்லாஹ் தீர்மானித்தவற்றின் பால் தீமையைச் சேர்த்துள்ளான். தீமையென்பது எப்படி என்றால், பூமியில் பஞ்சம், நோய், வறுமை, அச்சம் போன்ற வற்றால் ஏற்படக்கூடிய அட்டகாசம் கூட தீமைதான். எனினும் அந்தத் தீமை வேறொரு கட்டத்தில் நன்மையாக இருக்கும்.

இதுபற்றி அல்லாஹ் கூறியுள்ளான்.

*மனிதர்களின் கைகள் சம்பாதித்த (தீய)வற்றின் காரணமாகக் கரையிலும், கடலிலும் (அழிவு) குழப்பம் வெளிப்பட்டு விட்டன; அவர்கள் செய்த (தீய)வற்றில் சிலவற்றை அவர்களுக்கு அவன் சுவைக்கும்படிச் செய்வதற்காக (இவ்வாறு சோதிக்கிறான்; அதன் மூலம்) அவர்கள் (தவ்பாச் செய்து அவன்பால்) திரும்பிவிடலாம்.*

**(அர்ரூம்) 30 : 41**

விபச்சாரம் செய்பவர்களை கல்லெறிந்து கொள்வதும், கள்வனின் கையை வெட்டுவதும், அவர்களைப் பொருத்தவரை தீமையே என்றாலும், இன்னொரு வகையில் நோக்கினால், அது மறுமையின் கடுமையான தண்டனையும், இவ்வுலக தண்டனையும் ஒன்று சேர்க்கப்படமாட்டாது, என்ற அடிப்படையில் அது அவர்களுக்கு நன்மையாகவே உள்ளது. ஏனெனில், (அவ்வாறு தண்டிப்பது) அவர்கள் செய்த குற்றத்துக்கு பட்சாதாபமாக அமையும். அப்போது அவர்களுக்கு இம்மை, மறுமை தண்டனையிரண்டையும் ஒரே நேரத்தில் சேர்த்துக் கொடுக்கப்படமாட்டாது. (தண்டனை) மற்றுமொரு கட்டத்தில்கூட சிறந்ததாகவே உள்ளது. அதாவது, அவ்வாறு ஒருவரை தண்டிப்பதால் மற்றவர்களின் பணங்கள், வம்சங்கள், மானங்கள் பாதுகாக்கப் படுகின்றன.



# ஏழாம் பாகம்

## மேற் கூறிய விசுவாசத்தின் பலன்கள்:-

இவ்வாறாகப் பாரிய அடிப்படை அம்சங்களை உள்ளடக்கியுள்ள இந்த உயரிய "அகீதா" கொள்கையானது அதனைக் கொள்கையாக ஏற்றுக் கடைப்பிடிக்கப் படுபவருக்கு அநேகமான உயரிய பலாபலன்களைத் தருகின்றன

## அல்லாஹ்வைக் கொண்டு விசுவாசிப்பதால் ஏற்படும் பலன்கள்

அல்லாஹ்வைக் கொண்டும், அவனின் பெயர்கள், பண்புகளைக் கொண்டும் விசுவாசிப்பதால் அடியானுக்கு அல்லாஹ்மீது அன்பும், அவனைப் பற்றிய பூரணமான கௌரவமும் உண்டாகிறது. (இந்த அன்பு, கண்ணியம்) காரணமாக அல்லாஹ்வின் கட்டளையை ஏற்கவும், அவனின் விலக்கல்களை தவிர்ந்து கொள்ளவும் முடிகின்றது. இவ்வாறு அல்லாஹ்வின் கட்டளையை ஏற்று, அவனின் விளக்கல்களைத் தவிர்ந்து கொள்வதால் தனி மனிதனுக்கும், சமுதாயத்துக்கும், இம்மையிலும், மறுமையிலும் சுபீட்சம் கிடைக்கிறது.

அல்லாஹ் கூறியுள்ளான்,

*ஆண் அல்லது பெண் - அவர் விசுவாசங் கொண்டவராக இருக்க, யார் நற்செயலைச் செய்தாரோ நிச்சயமாக நாம் அவரை நல்ல வாழ்க்கையாக வாழச் செய்வோம்; இன்னும், நிச்சயமாக, அவர்களுக்கு அவர்களது கூலியை அவர்கள் செய்து கொண்டிருந்தவற்றில், மிக அழகானதைக் கொண்டு நாம் கொடுப்போம்.*

**(அன்னஹ்ல்) 16 : 97**

## மலக்குமார்களைக் கொண்டு விசுவாசிப்பதால் கிடைக்கின்ற பலன்கள்

1. (வானவர்களை) அவர்களைப் படைத்த இறைவனின் மகத்துவத்தையும், அவனின் சக்தி, அதிகாரத்தையும் அறிந்து கொள்ள முடிகிறது.

2. அல்லாஹ் தன் அடியார்களை பாதுகாப்பதற்காக, அவனுக்கு நன்றி பாராட்டுதல். ஏனெனில், அல்லாஹ் த்ஆலா மலக்குகளுள் சிலருக்குத் தன் அடியார்களைப் பாதுகாக்கும் பொறுப்பையும், அவர்களின் செயல்களைப் பாதுகாக்கும் பொறுப்பையும் வேறு அவர்களின் நன்மைகளைக் கவனிக்கும் பொறுப்பையும் சாட்டியுள்ளான்.

3. (மலக்குமார்கள்) பூரணமுறையில் வணங்குவதற்காகவும், அவர்கள் விசுவாசிகளுக்காக இறைவனிடம் மன்னிப்புக் கோருவதன் காரணமாகவும், அவர்கள் மீது அன்பு கொள்ளல்.

## வேத நூல்களை விசுவாசிப்பதால் ஏற்படும் நன்மைகள்

1. அல்லாஹ் தன் படைப்புக்கள் மீது கொண்டுள்ள கவனம், அவனது அருள் ஆகியவற்றை அறிய முடிகின்றது. ஏனெனில், அல்லாஹ் ஒவ்வொரு சமுதாயத்தினருக்கும், ஒவ்வொரு வேத நூலை அவர்கள் நல்வழி பெறும் பொருட்டு இறக்கி வைத்தான்.

2. அல்லாஹ்வின் ஞானத் தன்மை (தீர்க்கமான அறிவின் தன்மை) வெளிப்படையாவது. இந்த வேத நூல்கள், அல்லாஹ் ஒவ்வொரு சமுதாயத்துக்கும் எது பொருத்தமானதோ, அதையே அவன் இந்நூல்களில் விதியாக்கியுள்ளான். இந்த வேத நூல்களுள் இறுதியானதாக புனித குர்ஆன் உள்ளது. மறுமை நாள் வரைக்கும் உள்ள எல்லாக் கால கட்டத்திற்கும், எல்லா இடங்களுக்கும், எல்லாப் படைப்புகளுக்கும் பொருத்தமானதாகவே, இந்த புனித குர்ஆன் இருக்கின்றது.

3. இவ்வாறாக, அல்லாஹ் அருளிய அருட் கொடைக்கு அவனுக்கு நன்றி பாராட்டுதல்.

# ரஸூல்மார்களை விசுவாசிப்பதால் கிடைக்கும் நன்மைகள்

1. அல்லாஹ் தன் படைப்புகளிடத்தில் கொண்டுள்ள கருணையும், கவனத்தையும் அறிந்து கொள்ளல், ஏனெனில் அல்லாஹ் நேர்வழி காட்டுவதற்காகவும், நல் வழிப்படுத்துவதற்காகவும், கன்னியமிக்க அந்த தூதர்களைத் தன் அடியார்களுக்காக அனுப்பினான்.

2. இந்த மாபெரும் அருட்கொடைக்காக அல்லாஹ்வுக்கு நன்றி பாராட்டுவது.

3. ரஸூல்மார்களை அவர்களுக்குப் பொருத்தமானவாறு புகழ்வதும், அவர்களை கண்ணியப் படுத்துவதும், விரும்புவதும் ஏனெனில், அவர்கள் அல்லாஹ்வின் தூதர்கள், அவனின் அடியார்களுள் நல்லோர், அவர்கள் அல்லாஹ்வைத் திறன்பட வணங்கி, அவனின் தூதைப் பரப்பி, அவனின் அடியார்களுக்கு நல்லுபதேசம் புரிந்து, அவர்களுக்கு ஏற்பட்ட துன்பங்களை எல்லாம் பொறுத்து வந்தார்கள்.

# மறுமை நாளைக் கொண்டு விசுவாசிப்பதால் கிடைக்கும் பிரயோசனங்கள்

1. மறுமை நாளின் நன்மையை விரும்பி, அல்லாஹ்வை வழிபடுவதில் கண்ணும் கருத்துமாயிருத்தல். மேலும் அதே நாளில் தண்டனையை அஞ்சி அஞ்சி அல்லாஹ்வுககு மாறு செய்வதை விட்டும் தூரமாதல்.

2. எந்தத முஃமினும், மறுமையின் நன்மையையும், அதன் இன்பத்தையும் நாடி அதற்காக இம்மையின் இன்பம், அதன் சுகம் ஆகியவற்றை விட்டுக் கொடுத்து, அவன் மனம் ஆறுதல் அடைதல்.

## விதியைப் பற்றி விசுவாசிப்பதில் உள்ள நன்மைகள்

1. எல்லா விடயங்களைச் செய்யும் போதும் அல்லாஹ்வின் மேல் நம்பிக்கை கொள்ளுதல். ஏனெனில், நாம் செய்யும் விடயமும், அதனைச் செய்யத் தூண்டும் காரணியும், அவையிரண்டுமே அல்லாஹ்வின் விதிப்படியே அமைகின்றன.

2. மன அமைதியும், உள ஆறுதலும், ஏனெனில் ஒருவர் தன் எல்லா விடயங்களும் இறை விதிப்படியே நடக்கும் என்பதையும் வெறுக்கக் கூடிய சம்பவங்கள் கூட சம்பவித்தே தான் தீரும் அவற்றை யாராலும் தடுக்க முடியாது என்றும் அறிந்தால் உள்ளம் அமைதி பெற்று, ஆத்மா திருப்தியடைந்து விடுவதுடன், அல்லாஹ்வின் விதியால் மனிதன் திருப்தியும் அடைகின்றான். எனவே, அல்லாஹ்வின் விதியை விசுவாசிக்கும் ஒருவரைவிட உறுதியான மன அமைதியும், ஆத்மா சாந்தியும், இனிய வாழ்வும் பெற்றோர் யாரும் இலர்.

3. நாடியதை அடையும் போது ஏற்படும் தற்பெருமையும், ஆச்சரியமும் தூரத்தப்படுகின்றமை. ஏனெனில் ஒருவருக்கு அல்லாஹ் அவனுக்குத் தீர்மானித்த நன்மை, வெற்றி ஆகிய காரணங்களால் ஏற்பட்ட இறையருளேயாகும். எனவே, அதற்காக அவன் அல்லாஹ்வுக்கு நன்றி கூறுவான். தற்பெருமை கொள்வதைத் தவிர்த்துக் கொள்வான்.

4. நாடியது கிடைக்கும் போது, அல்லது விரும்பாத ஒன்று சம்பவிக்கும் பட்சத்தில் ஏற்படும் கலக்கத்தையும், பதற்ற நிலையையும் தூரப்படுத்துதல். ஏனெனில், வானங்கள் பூமி ஆகியவற்றைப் படைத்தவனான அல்லாஹ்வின் தீர்ப்பின் படியே அது நடந்து விட்டது, எதுவும் நடந்தே தீரும், அதனை தட்ட முடியாது. எனவே அதனைப் பொறுமையுடன் ஏற்று மறுமையில் தனக்குள்ள நன்மையை மனதில் நினைத்துக் கொள்ளவே வேண்டும் என்பதாகும்.

இதனையே பின்வருமாறு அல்லாஹ் குறித்துக் காட்டியுள்ளான்.

*எந்தத் துன்பமும் அதனை நாம் சிருஷ்டிப்பதற்கு முன்னதாக, (லவ்ஹுல் மஹ்ஃபூள் என்னும்) புத்தகத்தில் (பதியப்பட்டு) இருந்தே தவிர பூமியிலோ அல்லது உங்களிலோ ஏற்படுவதில்லை; நிச்சயமாக இது அல்லாஹ்வுக்கு மிக்க எளிதானதாகும்.*

*உங்களுக்கு தவறிவிட்டதின் மீது நீங்கள் கவலைப் படாமலிருப்பதற்காகவும், (அல்லாஹ்வாகிய) அவன் உங்களுக்குக் கொடுத்ததைப் பற்றி நீங்கள் (வரம்பு மீறி) மகிழ்ச்சி கொள்ளாமலிருப்பதற்காகவும் (இதனை உங்களுக்கு அறிவிக்கின்றான்); கர்வங்கொண்டு, தற்பெருமையடிப்போர் ஒவ்வொருவரையும் அல்லாஹ் நேசிப்பதில்லை.*

**(அல்ஹதீத்) 57 : 22, 23**

எனவே, எம்மை இந்தக் கொள்கையில் நிலை பெறச் செய்யுமாறும், இந்தக் கொள்கையின் பிரதிபலன்களை எமக்குத் தந்து, இறைவனின் சிறப்பை எமக்கு வாரி வழங்குமாறும், எம்மை நேர் வழிப்படுத்திய பிறகு, எம் உள்ளங்களை மாற்றாமலும், அவனின் அருளைக் கொடையாகத் தந்தருளுமாறும் நாம் அல்லாஹ்வை வேண்டுவோமாக. நிச்சயமாக அல்லாஹ் நிகரற்ற கொடை வள்ளல். சர்வலோக இறைவனான அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்.

மேலும், எமது நபி முஹம்மத் ﷺ அவர்கள் மீதும், அவர்களின் உறவினர்கள், தோழர்கள் மீதும், அவர்களை முறையே பின்பற்றியவர்கள் மீதும், அல்லாஹ் ஸலாத்தும் ஸலாமும் கூறுவானாக.

## - முற்றும் -

*நூலாசிரியர் :*
முஹம்மத் ஸாலிஹ் அல் உஸைமீன்
30, ஷவ்வால் 1404 ஹிஜ்ரி



*தமிழில் :*
மௌலவி எம்.எஸ். எம். ரஷீத்

عقيدة

# أهل السنة والجماعة

لفضيلة الشيخ محمد بن صالح العثيمين

نقله إلى اللغة التاميلية

محمد شريف محمد رشيد

## الإصدار الرابع

# عقيدة أهل السنة والجماعة

لفضيلة الشيخ :

محمد بن صالح العثيمين




المكتب التعاوني للدعوة والإرشاد وتوعية الجاليات بالسليم

الرياض - حي المنار - مقابل العيادات الخارجية لمستشفى اليمامة

هاتف : ٢٢٦٨٢٣٦ - ٢٣٥٠١٩٤ - فاكس : ٢٣٠١٤٦٥

ص . ب : ٥١٥٨٤ الرياض : ١١٥٥٣

التاميلية

٤٣

مطبعة النرجس - ت : ٢٣١٦٦٥٢